# குழந்தைப் புத்தகங்கள்

**சிலையும் குருவியும்** — **ஆஸ்கார்வைல்டு**

ஒரு சிறு குருவி. ஒரு அழகிய இளவரசனின் சிலை. மக்கள் படும் கஷ்டத்தைச் சகியாது அந்தச் சிலை செய்யும் தியாகமும், இளவரசனின் தியாகத்தில் சொக்கிப் போய் அந்தச் சிறு குருவி தன்னையே மறந்துசெய்யும் காரியங்களையும் மிக அழகாக ஆசிரியர் எழுதியிருக்கிறார்.

விலை அணு எட்டு — தபால் செலவுடன் ஒன்பதணு

**மாயவிளக்கு** — **அணில் அண்ணன்**

இது அராபிக் கதை. குழந்தைகளுக்காக எளிய தமிழில் எழுதப்பெற்றது. ஒரு சீனச் சிறுவன். அவனைக்கொண்டு உலக இன்பங்களை வெகு சுலபமாக அடைய நினைக்கிறான் ஒரு மந்திரவாதி. சிறுவனை அடைந்தான். அவன் அடைய நினைத்த விளக்கு அவனுக்குக் கிடைக்கவில்லை. சிறுவனுக்கே கிடைத்தது. சிறுவனிடம் பொறுமை அடைந்த மந்திரவாதி சூழ்ச்சியால் விளக்கை அடைந்தான். சிறுவனாக இருந்து பெரியவனான அலாவுதீன் மோதிரத்தின் மாயத்தால் மறுபடியும் விளக்கை அடைந்து மந்திரவாதியை மேல் உலகத்துக்கு அனுப்புகிறான். சுவாரசியமான கதை, படிக்கப்படிக்கத் தெவிட்டாது.

'தாணு' எழுதிய அழகிய மூவர்ண அட்டைப் படம், 'ராகி' எழுதிய படங்கள் உள் பக்கங்களை அலங்கரிக்கிறது.

விலை. ரூ. இரண்டு. — தபால் செலவுடன் ரூ. 2 8 0

**கூனன் கதை** — **அணில் அண்ணன்**

இதுவும் அராபிக்கதைதான். ஆயிரத்தோரு இரவுகள் என்ற கதையிலே மிகவும் உயர்ந்த கதை இதுதான். சிறுவர்க்காக எளிய நடையில் எழுதப் பெற்றது. பக்கத்துக்குப் பக்கம் சிரிப்பு மூட்டும் சம்பவங்கள். ஐயோ இனி என்ன நடக்குமோ என்ற எண்ணம் ஒவ்வொரு வரியைப் படிக்கும்போதும் தோன்றிக் கொண்டே இருக்கும். செத்துப்போன ஒருவன் கடைசியாக உயிர் பிழைத்து வருகிறான். மருந்ில்லை, மாயமில்லை. எப்படிப் பிழைத்தான் என்பதைப் படிக்கும் போது ஒரே ஆச்சரியமாக இருக்கும்.

விலை அணு எட்டு — தபால் செலவுடன் அணு ஒன்பது

**சக்தி காரியாலயம், சென்னை-14.**

# பொருளடக்கம்

ஏப்ரல், 1954 மலர் 18 இதழ் 6





ஜய சித்திரை




வருடசந்தா ரூ. மூன்று தனிப்பிரதி அணா நான்கு

ஜய
சித்திரை

# சக்தி

மலர் 18
இதழ் 6

மெய்ப்பொருள் காண்பது அறிவு

எப்-54

## பரிசோதனைகள் வேண்டாம்

1945-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 5ம் தேதி அமெரிக்கா ஹிரோசிமாவின் மேல் அணுகுண்டை வீசிற்று. இதனுல் விளைந்த உயிர், பொருள் சேதங்களை மக்கள் இன்னும் மறந்துவிடவில்லை. அணுகுண்டின் வெடிப்பினுல் கட்டவிழ்த்து விடப்பட்ட நாச சக்திகள் இன்றும் ஜப்பானிய மக்களை துயரத்தில் மூழ்கடித்துக்கொண்டிருக்கின்றன.

அணுகுண்டு வீசப்பட்டு ஒன்பது ஆண்டுகள் கழிந்துவிட்டன. இந்த இடைக் காலத்தில் உலகெங்குமுள்ள மக்கள் இந்த சர்வ நாச குண்டுகளைத் தடை செய்ய வேண்டுமென்று குரல் எழுப்பி வந்திருக்கின்றனர். மக்களது ஏகோபித்த குரலுக்கு அமெரிக்கா செவி சாய்க்கவில்லை. மாருக, மேலும் மேலும் புது ரக குண்டுகளை உற்பத்தி செய்த வண்ணமிருக்கின்றது. இவர்களின் கடைசி கண்டுபிடிப்புதான் ஹைட்ரஜன் குண்டு.

ஹைட்ரஜன் குண்டு அணுகுண்டைக் காட்டிலும் அறுநூறு மடங்கு சக்தி வாய்ந்தது. தமிழ்நாடு முழுமையும் ஒரே பாலைவனமாக்க ஒரு ஹைட்ரஜன் குண்டு போதும். இத்தகைய பயங்கர நாச குண்டை அமெரிக்கா பசுபிக் மகாசமுத்திரத்தில் வெடித்துச் சோதனை செய்திருக்கிறது சென்ற மாதத்தில். இந்தச் சோதனையின் பின் விளைவுகள் உலகையே ஒரு கலக்குக் கலக்கியிருக்கிறது.

ஹைட்ரஜன் குண்டின் கோர சக்தி உலகெங்குமுள்ள மக்களை கவலை கொள்ளச் செய்திருக்கிறது. இந்தப் பரிசோதனைகளை உடனடியாக நிறுத்த வேண்டுமென்று கோரிக்கைகள் ஜப்பான், ஆஸ்திரேலியா, பிரிட்டன் முதலிய நாடுகள் விடுத்திருக்கின்றன. நமது பிரதமர் நேரு இந்தச் சோதனைகளை உடனே நிறுத்த வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருக்கிருர்.

அமெரிக்கா உலக மக்களின் இந்த ஏகோபித்த கண்டனக் குரலுக்கு செவி கொடுக்கவில்லை. மற்ருெரு குண்டையும் வெடித்துச் சோதனை செய்திருக்கின்றனர். இம்மாத இறுதியில் வேருெரு குண்டையும் பரிசோதிக்கப் போகிருர்கள்.

உலகையே நிர்மூலமாக்கக் கூடிய இத்தகைய நாசகர வேலையைச் செய்ய அமெரிக்காவை அனுமதிக்கக்கூடாது. இந்தப் பரிசோதனைகள் தடையின்றி நடைபெற்றால் உடனடியாக பாதிக்கப்படக் கூடியவர்கள் ஆசியர்கள்தான். ஏனென்றால் இந்தப் பரிசோதனைகள் முழுமையும் பசுபிக் மகா சமுத்திரத்தில் ஜப்பானை ஒட்டியுள்ள பகுதிகளில்தான் நடைபெறுகின்றன. இதன் காரணமாக ஜப்பான், இந்தியா, பர்மா, இலங்கை முதலிய ஆசிய நாடுகள்தான் உடனடியாகப் பாதிக்கப்படும்.

நம்முன்னுள்ள இன்றைய பிரச்னை யுத்த காலத்தில் ஹைட்ரஜன் குண்டுகளை உபயோகிப்பதை அனுமதிக்கலாமா, கூடாதா என்பதல்ல. இந்தப் பரிசோதனைகள் தொடர்ந்து நடத்த அனுமதிப்பதா என்பதுதான் பிரச்னை. ஆகவேதான் பிரதமர் நேரு இந்தச் சோதனைகளையே நிறுத்த வேண்டுமென்று அறைகூவல் விடுத்திருக்கிறார். பிரதமரின் குரலைப் பலப்படுத்த வேண்டுவது நம்முடைய கடமை. கட்சி மதப் பாகுபாடுகள் இன்றி எல்லோரும் ஒன்றுபட்டு நிற்போம்.

# காலச்சுழல்

**பிரஞ்சிந்தியாவில் விடுதலை இயக்கம் :** பிரஞ்சிந்தியாவில் எவரும் எதிர்பாராத பல சம்பவங்கள் நடைபெற்றுவருகின்றன; நேற்றுவரை பிரஞ்சு அரசாங்கத்துக்கு ஆதரவாக இருந்த கட்சிகளும் நபர்களும், பிரஞ்சிந்திய விடுதலைப் போராட்டத்துக்கு ஆதரவைத் தர முன் வந்திருக்கின்றனர். போராட்டத்தில் முழுக்க முழுக்க பங்கு கொண்டிருக்கின்றனர். வரவேற்க வேண்டிய மாற்றங்கள் இவைகள்.

இந்திய மண்ணிலே அந்நிய அரசாங்கத் திட்டுகள் இருப்பது நமது சுதந்திரத்திற்கு ஆபத்து. இந்த பிரதேசங்களைத் தங்கள் தளங்களாகக் கொண்டு இந்தியாவை ஆக்ரமிக்க, இந்தியாவைத் தங்கள் கீழ் பணிய வைக்க, அதன் மூலம் தங்கள் உலக ஆதிக்க ஆசையை நிறைவேற்றிக் கொள்ள அமெரிக்கா முயன்று வருகிறது. கோவாவில் நடைபெறும் நிகழ்ச்சிகள், பாகிஸ்தான் அமெரிக்க ராணுவ ஒப்பந்தம், சமீபத்தில் காஷ்மீரில் நடைபெற்ற சம்பவங்கள் எல்லாம் இந்த உண்மையைத் தெட்டத் தெளிவாகக் காட்டுகிறது. இந்தச் சூழ்நிலையில் மேலும் ஒரு நிமிஷமேனும் இந்திய மண்ணில் அந்நியப் பிரதேசங்கள் இருப்பதை அனுமதிப்பது தற்கொலைக்கொப்பான செயலாகவே முடியும். உடனடியாக இந்தப் பிரதேசங்கள் விடுதலையடைந்து இந்திய யூனியனுடன் சேரவேண்டும். இதற்காக இப்பிரதேசங்களில் நடைபெறும் போராட்டங்களுக்கு முழு ஆதரவையும் நாம் கொடுக்க வேண்டும். இந்திய அரசாங்கமும் இப்பிரச்னையில் உடனடியாகச் செயல்பட வேண்டும் என்று கோருகிறோம்.

**தமிழனின் சாதனை :** இந்தியாவுக்கும் இலங்கைக்கும் இடைப்பட்டுள்ள கடலை நீந்திக் கடந்து ஒரு புதிய சரித்திரத்தையே உண்டாக்கி விட்டார் வீரர் நவரத்தினசாமி. இதுவரை யாருமே செய்யாத ஒரு மகத்தான சாதனையை செய்திருக்கிறார் இவர். இவரது ஆற்றலையும், விடா முயற்சியையும், தன்னம்பிக்கையையும் பாராட்டுகிறோம். இவர் ஒரு தமிழர் என்பதால் நாம் பெருமைப்படுகிறோம். இவர் அடுத்து மேற்கொள்ளும் முயற்சிகளும் வெற்றி பெறவேண்டும் என்று வாழ்த்துகிறோம். ★

# வருங்கால அரசியல் மொழி

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை

உலகம் இன்று பெரிதும் விழிப்படைந்துள்ளது. அதன் ஜீவநாடி சென்ற சில நூற்றாண்டுகளைப்போல் மந்தகதியுடையதாயில்லை. முழு வலிமையுடன் செயல்பட்டுக்கொண்டிருப்பதற்கடையாளமான தீவிரத் துடிப்பை அதனிடத்துக் காணலாம். எங்கும் உரிமைப் போராட்டம். அதுவும் உணர்ச்சி வேகத்தோடு.

மனித உள்ளம் கட்டுற்று நிற்கும் குட்டை நீரல்ல. இன்பக் கடலை நோக்கி அதிவிரைவோடு பாய்ந்து செல்லும் அருவி நீர். இன்ப விழைவு அதனிடம் இயல்பாய் அமைந்த ஒன்று. அவ்வியல்பு இல்லாவிட்டால் மனித சமூகம் இன்று இந்த உன்னத நிலையை எய்தி இருக்கமுடியுமா? அன்று நிர்வாணமாய்க் காய் கனிகளைத் தின்று காடுமலைகளில் விலங்குகளோடு விளங்காய் அலைந்து திரிந்தானே மனிதன், அதே நிலையில்தான் இன்னும் அவன் இருப்பான் அன்றிக் காலத்தையும் இடத்தையும் வென்றவனாய், வானையும் கடலையும் ஏவல் கொள்பவனாய், செயற்கரும் செயல்கள் என்றிருந்தவற்றையெல்லாம் எளிதில் செய்து முடிக்க வல்லவனாய்த் திகழமுடியுமா?

மனிதனுக்கு இந்த முற்போக்கு எப்படி வாய்த்தது? ஒரே ஒருவன் ஒரே ஒரு காலத்தில் தனித்திருந்து சாதித்த சாதனையா? இல்லை. பல நூற்றாண்டுகளாகப் பல்லாயிரக் கணக்கான மக்கள் புரிந்துவந்த கூட்டு முயற்சியின் பயனே இன்றைய முற்போக்கு. மனிதன் எப்போதும் கூடி வாழும் இயல்புடையவன். அவனிடம் வேற்றுமை யுணர்ச்சி இல்லாமலில்லை; போர்க்குணம் இல்லாமலில்லை. போட்டியும் பொறாமையும் பகைமையும் அவனிடம் குடிகொண்டுதான் இருக்கின்றன. என்றாலும் இவற்றுக்குமேலான பரந்துபட்டதொரு ஒற்றுமையுணர்ச்சி அவன் பிறவிக் குணமாக அமைந்து கிடக்கிறது.

நமது இந்தியரிடையிலேதான் எத்தனை வேற்றுமைகள்! வடநாட்டிலே இஸ்லாமியருக்கும் இந்துக்களுக்கும் வெட்டுப்பழி குத்துப்பழி. இந்துக்கள் அனைவரும்தான் ஒன்றுபட்டவர்களா? வைணவர்களுக்குச் சைவர்களைக் கண்டால் பிடிக்காது. வைணவருள்ளும் வடகலையாருக்கும் தென்கலையாருக்கும் சண்டை. சைவர்களிலும் அப்படித்தான். சமண பௌத்தர் போராட்டத்தைப் பற்றிச்

---

தமிழ் நாட்டில் எந்த மொழி அரசியல் மொழியாக இருக்க வேண்டும். தமிழா? இந்தியா? ஆங்கிலமா? அரசாங்கம் ஹிந்தியைத் திணிக்க முயல்கிறது. ஒருசில 'அறிவாளிகள்' ஆங்கிலத்திற்கு 'வக்காலத்து' வாங்குகிறார்கள். எது சரி? இந்தக் கட்டுரையில் கவிமணியவர்கள் சரியான பாதையைக் காட்டுகிறார்கள். கலைக் கதிர் பத்திரிகையிலிருந்து வெளியிடுகிறோம்.

சொல்லவேண்டியதில்லை ஒவ்வொரு மதப் பிரிவினருக்கும் ஏனைய மதத்தவர் பகைவர்களாகவே காட்சியளிக்கிறார்கள். சாதிச்சண்டை மொழிச்சண்டைகளைப் பார்க்கப்போனால் அவற்றுக்கு ஒரு கணக்கு வழக்கில்லை. பிற நாடுகளைவிட நம் நாட்டிலே இந்தச் சாதிசமய மொழிப் பிணக்குக் கூடுதல் என்று சொன்னால் அது மிகையாகாது.

இந்த இயல்பு படைத்த இந்திய மக்கள் இலங்கையிலும் தென்னாப்பிரிக்காவிலும் பல்லாயிரம்பேர் வாழ்கிறார்கள். அவர்களனைவரும் ஒரே சாதியினரோ, ஒரே சமயத்தினரோ, ஒரு மொழி பேசுபவரோ அல்லர். அப்படியிருந்தும் அனைவரும் ஒருங்கு திரண்டு நிற்கின்றார்கள். ஏன்? எல்லோரையும் பாதிக்கக்கூடிய பொதுவான பிரச்சினைகள் அங்கே கிளம்பின. அவற்றைச் சமாளிக்கச் சாதியின் பேராலோ, மதத்தின் பேராலோ ஒன்று திரள முடியாதெனக் கண்டார்கள். ஆகவே 'இந்தியர்' என்ற ஒரு கூட்டணிக்குள் திரண்டார்கள்; போர் தொடுக்கின்றார்கள். அப்படி நின்றால்தான் அவர்களுக்கு அங்கே வலுவுண்டு. எனவே, தம் காலிற் பூட்டிய தளையை உடைத்தெறிய — உரிமையை அடைய — நல்வாழ்வு பெற விரும்பிய மக்கள் நாட்டின் பேரால் ஒன்று திரண்டு நிற்கும் நிலையை அங்கே பார்க்கிறோம்.

1947-ல் நம் நாட்டில் என்ன நடந்தது? இங்கே இந்துக்களுக்கு அடுத்தபடியாகப் பெருந்தொகையினராக வாழும் இஸ்லாமிய மக்கள் தமக்கெனத் தனி நாடு வேண்டும் என்று கருதினார்கள். அப்போதுதான் தமது மதம் பேணப்படும்; கலாசாரம் பாதுகாக்கப்படும் என்பது அவர்கள் கொள்கையாயிருந்தது. ஆகவே மதத்தின் பேரால் ஒன்றுதிரண்டுகிளர்ச்சி செய்தனர்; கருதிய பயனை அடைந்தனர். அவர்களுக்கு அங்கே வலுவைக் கொடுத்தது மதம் என்னும் கூட்டணி. ஆனால் மத அடிப்படையில் ஏற்படும் நாட்டுப்பிரிவினையை ஆதரித்தவருமில்லை; இனி ஆதரிப்பவரும் இரார் என்பதுதான் என் எண்ணம்.

மக்கள் கூடிவாழும் இயல்புடையவர்கள் என்று மேலே சொன்னேன். அவர்கள் தங்கள் ஒற்றுமைக்காகவே சாதி என்றும் மதமென்றும் கற்பித்துக்கொண்டார்கள். இந்தச் சாதி மதப் பாகுபாடுகளனைத்தையும் இணைத்து அவற்றிடையே ஒரு ஒற்றுமை காண வல்லது மொழி ஒன்றே. மொழிப்பாகுபாடு இயல்பானது; இயற்கையானது. அதனாலேதான் மொழி அடிப்படையில் நாடுகள் அமையவேண்டுமென்பதில் எல்லா மொழியாளர்களும் ஒன்றுபட்டகருத்துடையவர்களாயிருக்கிறார்கள்.

எங்கு பார்த்தாலும் மொழிவாரியாக மக்கள் இணைந்திருப்பதைக் காண்கிறோம். பாரதத்தின் தென்னெல்லையில் மூன்று கோடித் தமிழர்களும் சேர்ந்தாற்போலவே வாழ்கின்றார்கள். மேல் கடற்கரையில் 120 லட்சம் மலையாளிகளும் அங்ஙனமே வாழ்கிறார்கள். ஆந்திர நாட்டிலும் ஐதராபாதிலுமாக மூன்று கோடித் தெலுங்கர்கள் ஒரே பரவலாக இருப்பதைக் காணலாம். கன்னடர்களும் அப்படி. மராத்தியர், சௌராஷ்டிரர், பஞ்சாபியர், வங்காளிகள் முதலிய அனைவரும் கோடுகீறி அடைக்

கத் தகுந்தவாறு இணைந்து தான் வாழ்கிறார்கள். இந்த அமைப்பு யாரேனும் வலுக் கட்டாயமாகக் கூட்டிவைத்த கூட்டமைப்பா? இல்லவே இல்லை. இவர்கள் நாடும் மொழியின் பேரால் தானே அழைக்கப்படுகிறது! மொழியினடியாக நாடு பெயர் பெற்றதோ, அன்றி நாட்டினடியாக மொழி பெயர் பெற்றதோ நாம் அறியோம்; நாடும் மொழியும் மிகமிக நெருங்கிய தொடர்புடையவை என்பது மட்டும் உறுதி. ஆகவே மொழியினடிப்படையில் மக்கள் கூடி வாழ வழி வகுத்துக் கொடுப்பது அவர்கள் நலனுக்கும் அதன் மூலம் இந்தியாவின் நலனுக்கும் இன்றியமையாததல்லவா?

மொழிவாரி மாகாணத்தால் பிளவுகள் உண்டாய்விடும் என்று சிலர் சொல்கின்றார்கள். இது சுத்தத் தப்பு; வேண்டுமென்று கூறும் சாக்குப் போக்கு. மொழி, மக்களை ஒன்றுபடுத்துமா, வேறுபடுத்துமா என்பதைப்பற்றிச் சர்ச்சை செய்யும் நிலையிலேதான் நாம் இன்றும் இருக்கிறோம். ஆனால் மொழிப் பொதுமையினால் மக்களை ஒன்றுபடுத்த முடியுமென்பதையும், மொழிக் குலைவினால் அவர்களுக்குள் வேற்றுமை வளர்க்கலாமென்பதையும் ஆங்கிலேயர்கள் பன்னூறுண்டுகளுக்கு முன்னரே நன்கு உணர்ந்திருந்தார்கள். அவர்கள் இந்நாட்டிலாண்ட 150 வருட ஆட்சிக்குத் துணை நின்றது ஆங்கில மொழி. அதற்குத் தான் அவர்கள் முதலிடம் கொடுத்தார்கள். நாட்டு மொழிகள் பேணப்பட வில்லை; அவை ஒடுக்கப்பட்டன. அவற்றுக்கு இழிவு கற்பிக்கப்பட்டது மின்றி ஒரு மொழி பேசும் மக்கள் சக்தி ஒன்றுபட்டிராவண்ணம் அவர்கள் நாடு, கைவேறு கால் வேறாகத் துண்டிக்கப்பட்டன. மூன்று மொழி, நான்கு மொழி பேசுவோர்கூட ஒரே நாட்டமைப்புக்குள் இருந்தார்கள். அவர்களை இறுக்கிப் பிணைத்து நின்றது ஆங்கில மொழி. இன்று அந்தக் கட்டு அவிழ்ந்துவிட்டது என்றாலும் அவர்கள் தம்மவர்களோடு சேர்ந்து வாழ வகையில்லை.

அன்று தேச ஒற்றுமைக்கும், அதன் மூலம் விடுதலைக்கும் பாடுபட்ட காங்கிரஸ், ஆங்கிலேயரின் பிரித்தாளும் சூழ்ச்சி கண்டு உள்ளம் குமுறியது; கசிந்துருகிக் கண்ணீர்விட்டது. சுதந்திரம் கிடைத்தால் முதல் வேலையாக மொழிவழி மாகாணங்கள் அமைக்கப்படும் என்று தீர்மானம் கொணர்ந்து நிறைவேற்றியது. அதன் தொடக்கச் சடங்காக நாடு முழுமையும் மொழி வாரியாகக் காங்கிரஸ் கழகங்களை நிறுவியது. காந்தியடிகளும் மொழிவழி மாகாணத்தின் இன்றியமையாமையைப் பலபடக் கூறியுள்ளார். இவற்றை எல்லாம் மக்கள் மறந்துவிடவில்லை. ஆனால் சில தலைவர்களோ யாவும் மறந்து பேசுகின்றார்கள். மறந்தவர்களுக்கும் மறவாதவர்களுக்கும் சில மோதல்கள்; சிந்தி சிரிக்கும்படியான மோதல்கள். என்ன விந்தை!

இப்பொழுது மாகாணங்களை மாற்றியமைக்கத் தொடங்கினால் பெரும் கஷ்டங்கள் ஏற்படுமாம். ஆம்; உண்மை. கஷ்டங்களுக்கு அஞ்சிச் செய்யத் தகுந்தவற்றைச் செய்யாமலிருப்பதா? பிள்ளைப் பேறு கஷ்டமானது தான். அதற்காக மணம் செய்துகொள்ள விரும்பாதவர்



RM. MUTHIAH
ARTIST
KOTTAIYUR
(RAMNAD DIST.)

உண்டா? ஆட்சி பீடம் ஒரு போதும் ஒரு பூம் படுக்கையாக இருந்ததில்லை; இராது. கஷ்டங்களில்லாத இன்ப நிலையமாக அரசாங்கம் இருக்குமானால் அதை நடத்த நம்மூரிலுள்ள குப்பனும் சுப்பனும் போதுமே. அரும் பெரும் தலைவர்கள் எதற்கு? ஆராய்ந்து துணிதலும், துணிந்த செயலில் வரும் துன்பத்தை விலக்குதலும், விலக்கரும் துன்பமுடையதாயின் தம் நுண்ணறிவால் அத்துன்பத்தின் அளவைக் குறைக்க முயலுதலும், இல்லை —இமயமலை போன்ற துன்பமே எதிர்ந்தது எனினும் பின்னிடாது நிற்றலும், மேற்கொண்ட செயலில் வெற்றி காணுதலும் போன்ற அளப்பரும் ஆற்றல்கள் அமையப் பெற்றவரே மாபெரும் தலைவர்கள். நிலமாளும் தலைவர்க்கு அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம், தூங்காமை, கல்வி, துணிவுடைமை என்னும் இயல்புகள் இருக்கவேண்டும் என்று கூறுகின்றார் திருவள்ளுவப் பெருந்தகையார்.

நாம் செய்த பாக்கியத்தால் நம் தலைவர்கள் இத்தகைய நல்லியல்புகள் வாய்க்கப் பெற்றவர்கள் என்பதற்கு எள்ளளவும் ஐயமில்லை என்பது மட்டுமல்ல, அவர்கள் தியாகத் தீயில் மூழ்கிக் குளித்தவர்கள். எத்தனையோ பனிப் புயல்களை எதிர்த்து நின்றவர்கள்; தீயாறுகளைத் தாண்டியவர்கள். இவர்கள் மொழிவாரி மாகாணப் பிரிவினையில் இன்னல்கள் நேர்ந்துவிடும் என்று அஞ்சுவதுதான் மிக்க வியப்பாக இருக்கிறது. என் சொல் இவர்கள் செவிக்கு எட்டுமானால் நான் சொல்வது இதுதான்:—

“இன்றைய மாகாண அமைப்பைக் கலைக்கத் தயங்காதீர்கள். நடுநிலை பிறழாத எல்லைக் கமிஷனை நியமித்துக் குறைந்த அளவுக் கஷ்டங்களுடன் மொழிவழி மாகாண அமைப்பினை உடனடியே நடைமுறைக்குக் கொண்டு வாருங்கள். அல்லாமல் பொட்டி ஸ்ரீராமுலு போன்ற தேசபக்தர்களைப் பலிகாணாதீர்கள். ஆந்திர மாகாணப் பிரிவினைக்குப் பின்னும் மொழிவழி மாகாணங்கள் அமைக்கத் தயங்குவது ஏன்? மக்களுள்ளங்களில் வேரூன்றிவிட்ட மொழிவழி மாகாண உணர்ச்சியை அடக்க எந்தச் சக்தியாலும் முடியாது. மக்கள் விருப்பத்தை மதித்து அதற்கொரு தீர்வுகாண நீங்கள் பிந்தினால் பிற கட்சிகள் இந்தப் பிரச்னையை ஏற்றெடுப்பதின் மூலம் மக்கள் ஆதரவைப் பெற முந்துவது இயல்பு. அன்றி, நாட்டில் புதுப் புதுக் கட்சிகள் தோன்றுவதற்கும் இடமேற்படும். ஆதலால் பின் விளைவினைக் கூர்ந்து நோக்கி உடனடியாக இதனை நிறைவேற்றி வையுங்கள்.''

இந்தச் சந்தர்ப்பத்தில் இன்னொன்றும் சொல்ல ஆசைப்படுகின்றேன். மருமகள் மருமகளாக இருக்குங்காலம் வரை மாமியாரின் கொடுமைகளைப் பற்றி அன்பும் ஆதரவும் சுரக்க, அறமும் விளங்க விரித்துக் கூறிக் கொண்டிருப்பாள். சில காலத்துக்குப் பின் இவளுக்கும் அந்த பதவி கிடைக்கும். அப்போது பார்க்கலாம் புது மாமியாரை. பழைய மாமியாரின் நாள்வழி பேரேடுக் கணக்குகளைத் தூக்கிக் கொள்வாள். அதன்படியே நடக்கவும் தொடங்கிவிடுவாள். முன்னைய நிலை அடியோடு மறந்துபோகும். குடும்பங்களுக்

குத் தான் இது இயல்பான தென்று நினைத்திருந்தோம். அரசியலுக்கும் இது ஏற்பதாகி விட்டது போலும்.

ஆங்கில ஆட்சியிலே எத்தனையோ குற்றங்களைக் கண்டோம்; குறைகளைக் கண்டோம். நமது ஆட்சி ஏற்படுமானால் இவை முதன் முதல் களையப்படும் என்று பிரதிக்லை எடுத்துக் கொண்டோம். ஆங்கிலேயர் சென்று பல வருடங்களாகி விட்டன. ஆனால் நடப்பதென்ன? அவர்கள் தமக்கென வகுத்த பாதைதானே நமக்கும் ராஜபாட்டையாக இருக்கிறது! மக்களுணர்ச்சியை மதிக்காமல் தம் ஆட்சியை இங்கே நிலை நிறுத்த அவர்கள் கையாண்ட முறைகளையே நாமும் கைக்கொள்கிறோம். இது எவ்வளவு தவறானது!

ஆங்கிலேயர்கள், தம் மொழியை இந்நாட்டில் திணித்து ஆங்கில மனப்பான்மை உண்டாக்கப் பாடுபட்டார்கள். இன்று பாரத அரசாங்கம் குமரி முதல் இமயம் வரை இந்தி மொழியைத் திணிக்கத் துடியாய்த் துடிக்கிறதே, அதன் நோக்கமென்ன? ஆங்கிலம் உலக மொழியாக விளங்குகிறது; அறிவுப் பொக்கிஷமாகத் திகழ்கிறது. நம் நாட்டில் 150 ஆண்டுகளுக்கு மேலாக மக்கள் அறிவில் ஊறிக் கிடக்கிறது. இந்த நிலையை இந்தி மொழி அடைய முடியுமா? இன்னும் 500 ஆண்டுகள் சென்றாலும் அடையமுடியுமா? அங்ஙனமிருக்க இளஞ்சிறார் உள்ளங்களில் ஏன் இந்த மொழிச்சுமையைச் சுமத்தப் பாடுபடுகிறார்கள் என்று கேட்கிறேன். வெறும் மொழி வகைகளைக் கற்பதற்காகவா இந்தப் பிள்ளைகள் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பப்படுகிறார்கள்?

நான் வாழும் நாஞ்சில் நாடு இன்று மலையாள நாட்டைச் சேர்ந்திருப்பது. இங்குள்ள குழந்தைகள் தம் தாய்மொழியான தமிழைக் கற்க வேண்டும். பிரதேச மொழியான மலையாளம் தெரிந்திருப்பது அவசியமாகிறது. ஆனால் நல்ல காலமாக மலையாளம் கட்டாயமாக்கப் படவில்லை. தேசிய மொழியான இந்தி கட்டாயப்பாடம். உலக மொழியான ஆங்கிலம் கற்றே ஆகவேண்டும். இரண்டாவது படிவம் படிக்கும்போதே மூன்று மொழிகளைக் கட்டாயம் படித்துத் தீரவேண்டிய கஷ்டமான நிலை ஒரு மாணவனுக்கு ஆரம்பித்துவிடுகிறது.

சென்னை சர்க்காராவது இந்தியை இஷ்ட பாடம்போலக் காட்டி மென்மையாகத் திணிக்கிறார்கள். திருவிதாங்கூர் அரசாங்கம் அப்படி ஒன்று மல்ல; யாருடனும் ஆலோசித்தது கிடையாது; சர்ச்சை நடத்தினது கிடையாது. தனது வலிமை வாய்ந்த கட்டளையின் மூலம் இந்தியைக் கட்டாயப்பாடமாக வைத்து அமுல் நடத்திவருகிறது. தமது மரபுக் கொவ்வாத இந்தியைக் கற்க இங்கே தமிழ் மாணவர் படும் பாடு கொஞ்சமா? அதன் உச்சரிப்புகளும், எழுத்து வேறுபாடுகளும் தம் உள்ளத்தில் படியாமையால் அப்பாடத்தில் பின்தங்கி இறுதித் தேர்வில் தோல்வியடைந்து கண்ணீரும் கம்பலையுமாக அலையும் மாணவர்கள் எத்தனையோ பலர். பள்ளிக்கூடங்களிலாயினும் சரி, இந்தியை வலுக் கட்டாயமாகத் திணிப்பது தமிழர்களுக்கு இழைக்கும் ஒரு பெருந் துரோகம் என்பதைச் சொல்லாமலிருக்க முடியாது.

பல மொழிகள் கற்பதை நான் எதிர்ப்பவனல்லன். விருப்ப மிருந்தால் — திறமிருந்தால் — ஒருவன் எத்தனை மொழிகளே வேண்டுமானலும் கற்கட்டும்; அறிவு திரட்டட்டும். தேசிய பாஷை, தேசிய பாஷை என்று போலிக் காரணம் சொல்லி எல்லோரையும் இந்தி கற்கும் படிக் கட்டாயப் படுத்துவதையே ஆட்சேபிக்கிறேன். ஒரு ஊரில் நூறுபேர் இருக்கிருர்களென்று வைப்போம். இந்த நூறுபேருக் கும் இந்தியைத் தம் வாழ்நாளில் பயன்படுத்தித் தீரவேண்டிய அவசியம் நேருமா? இவர்களனை வரும் வியாபாரத்தின் நிமித் தமோ, உத்தியோகத்தின் நிமித் தமோ வடநாடு செல்பவர்களா? இல்லை, அதில் இலக்கியம் விஞ் ஞானம் முதலிய அறிவுத் துறை கள் நிரம்பியிருக்கின்றன என்று படிக்கவேண்டுமா? அப்படி யாதேனும் உண்டா? இந்த வளமேதும் இல்லாத மொழியா நாடு முழுவதையும் பரந்து ஆட்சி நடத்த வேண்டும்? செல்வவானிடத்தில் சென்று கடன் வாங்குவதைத்தான் எங் கும் பார்க்கிறோம். அன்றித் தரித்திரனைச் செல்வனுக்கி அவ னிடம் கடன் கொள்வதை நாம் பார்த்ததில்லை. ஆகவே, இந்தி மொழியைக் கற்பதற்கென்று கைக்கொள்ளும் முயற்சி, சமயம், பொருள் முதலிய அனைத்தும் வீண் என்பதே என் கருத்து. இன்றைய அரசாங்கம், ஒவ் வொருவனும் தத்தம் மாகாண மொழியான தாய்மொழியையும், பொதுமொழியான ஆங்கில மொழியையும் கற்பதற்கான வழிவகைகளைச் செய்து கொடுத் தாற் போதுமானது. அதுவே அரிய சேவையாக அமையும். அதைவிட்டு இந்தியைத் திணிப் பதும் இந்தி படிக்கர்தவர்களுக்கு அரசியல் வாழ்வில்லை என்று ஆக்குவதும் ஏற்றுக்கொள்ளத் தக்கவையே யல்ல.

மாகாணங்கள் மொழிவாரி யாக அமையவேண்டுமென்று சொன்னேன். ஆம்; அதிவிரை வில் அமையவேண்டும் என்பது தான் என் மனங்கவர்ந்த ஆசை. அமைவதோடு, மாகாண அரசி யல் மொழி அந்தந்த மாகாணத் தவரின் தாய் மொழியாகவும் இருக்கவேண்டும். உதாரண மாகத் தமிழ்மாகாணம் அமைந் தால் மட்டும் போதாது; அதிலே தமிழ் அரசியல் மொழியாகவும் இருக்கவேண்டும். அரசாங்க நடவடிக்கைகளானலும் சரி, சட்ட சபை நடவடிக்கைகளானலும் சரி, தமிழிலேதான் இருக்க வேண்டும். இன்று தாலுகா ஆபீசுகளில்கூட ஆங்கிலத் திலேயே விண்ணப்பங்களோ மனுக்களோ எழுதிக்கொடுக்க வேண்டியிருக்கிறது. ஒருகால் தமிழில் கொடுத்தாலும் அவர் கள் தரும் பதில் திண்ணமாக ஆங்கிலத்திலேதான் இருக்கும். ஆங்கிலம் தேரியாத ஒருவன் கொடுப்பதற்கும் படிப்பதற்கும் இன்னெருவன் துணையை நாட வேண்டியவனுகிறுன். இதனல் நேரும் தொல்லைகளுக்கு அள வில்லை. ஒரு உதாரணம் தரு கின்றேன்.—

சில நாட்களுக்கு முன்வரை தாசில்தாரர்கள் சர்க்கரைக்கு (சீனிக்கு) அனுமதிச் சீட்டுக் கொடுக்கும் வழக்கம் இங்கே இருந்தது. சிறப்பான அவசியங் களுக்கானல் அபேட்சை எழுதிக் கிராம அதிகாரியின் சிபார்சு பெற்றுத் தாசில்தாருக்கு அனுப்பவேண்டும். அவர் அனு மதிச் சீட்டுக் கொடுப்பார். ஒரு நாள் கிராம அதிகாரியிடம் ஆங் கிலத்தில் எழுதப்பட்ட மனு

வைக் கொண்டு நீட்டினன் ஒருவன். அவருக்கு ஆங்கிலம் தெரியாது. ஆயினும் கௌரவம் குலையாமல் "மனு ஏன்? உமக்கு என்ன வேண்டுமாம்?" என்று கேட்டார் கிராம அதிகாரி. அதற்கு அவன் தனக்குப் பத்துப் பௌண்ட் சர்க்கரை தேவை என்றும் அதற்கான காரணம் இது வென்றும் சொல்லி, மனுவில் சிபார்சு எழுதிக் கேட்டான். உடனே அதிகாரி "இதில் எழுதப்பட்டிருப்வை அனைத்தும் உண்மைதான்" என்றெழுதிக் கையொப்பமிட்டுக் கொடுத்தார். அதை நேரே தாசில்தாருக்கு அனுப்பி வைத்தான் அந்த ஆசாமி.

தாசில்தார் மனுவைப் படித்துப் பார்த்தார். உடனே கிராம அதிகாரியை வரவழைத்தார். "நீர்கைக்கூலிவாங்கினதுண்டா? சர்க்கரைக் கார்டுகளை வேண்டியவர்களுக்கு வேண்டியபடிக் கொடுப்பதுண்டா? வந்தவர்களை மதிப்பற்ற முறையில் பேசி அனுப்புவது உண்மைதானா?" என்றெல்லாம் சரமாரியாகக் கேள்வி கேட்கலானார். கிராமாதிகாரி கை கால் நடுங்க "ஐயோ! நான் அப்படி ஒன்றும் செய்வதில்லையே; என்னைப் பற்றி யாரோ வேண்டுமென்று கள்ள மனு அனுப்பியிருக்கிறார்கள்; தாங்கள் இதை நம்பக் கூடாது" என்றுகுழறிக் குழறிக் கூறினர். "இந்த மனுவில் சொல்லப்பட்டிருப்பவை யனைத்தும் உண்மை தான் என்று நீரே எழுதிக் கையொப்ப மிட்டிருக்கிறீரே" என்று கூறி மனுவைக் காட்டினர் தாசில்தார். அப்பொழுது தான்கிராமாதிகாரிக்கு உண்மை விளங்கியது. தாம் ஏமாற்றப் பட்டு விட்டதாக உணர்ந்தார். நிகழ்ந்தது கூறி மன்னிப்பும் புத்திமதியும் பெற்றுப்போனர்.

இப்படி ஒன்று இரண்டா? ஆயிரக்கணக்கான வேடிக்கைகள், தவறுகள், இன்னல்கள் நாள்தோறும் நடந்த வண்ணமிருக்கின்றன. அந்நிய மொழி தெரியாத காரணத்தால்—அது அரசாங்க மொழியாக இருக்கும் காரணத்தால் அவதியுறும் மக்களின் தொகை கொஞ்சமா? ஏமாற்றுவோரும் ஏமாற்றப்படுவோரும் ஏராளமாகிவிட்டனர். கோர்ட்டு, கச்சேரி முதலான சர்க்கார் நிலையங்களில் இவரைப் பரக்கக் காணலாம். இந்த நிலை மாறவேண்டாமா? ஆங்கிலத்தை அகற்றிவிட்டு அவ்விடத்தில் இந்தியை நுழைத்தாலும் இந்த நிலை இருக்கத்தானே செய்யும்? இந்தியைத் திணிக்கத் துடிக்கும் அன்பர்கள் இதனைச் சற்றே சிந்தித்துப் பார்ப்பார்களாக.

மாகாண மொழி அரசியல் மொழியாக இருக்கவேண்டும் என்று நாம் சொல்லுகின்றபொழுது சிலர் நம்மை நோக்கி ஒரு கேள்வி போடுகிறார். "அரசாங்க நடவடிக்கைகளைத் தமிழின் மூலம் நடத்த முடியுமா? அந்தத்தகுதி தமிழுக்குண்டா?" என்பது அக்கேள்வி. அவர்கள் இந்தக் கேள்வியைச் சிறிது மாற்றி "அரசாங்கத்தை நடத்துவதற்குத் தமிழர்களால் முடியுமா? அந்தத் தகுதி தமிழர்களுக்குண்டா?" என்று கேட்டுப் பார்க்கட்டும்; அப்போது கிடைக்கும் இதற்கு விடை. உண்மைத் தமிழர் ஒவ்வொருவரும் இதற்கு விடையிறுக்க முன்வந்து விடுவார்கள். உள்ளங்கை அளவில் இருந்த ஆங்கில நாடு—அந்நாட்டு மொழி இன்று உலகாளும் தகைமை பெற்றுத் திகழ்கிறதே எப்படி வாய்த்தது இந்த நிலை? அம்மொழியில் இல்லாத கலைகள் அமைத்துச் சொல்ல முடியாத

நுட்பங்கள் உண்டா? அதன் ஆழமும், அகலமும், வன்மையும் எளிமையும், வளமையும், நுண்மையும் தான் எவ்வளவு? இவ்வுயர் நிலைக்குக் காரணம் அம்மக்களின் அறிவும் ஆற்றலும், ஊக்கமும் உழைப்பும் அல்லவா? அதற்கு அந்நிலை வாய்க்குமானால் இனிய தமிழ், செந்தமிழ், என்றும் தழைத்து வளரும் தமிழா அரசியலுக்குப் பக்குவமுடையதாகாது?

'குமரியொடு வட இமயத்து ஒரு மொழிவைத்து உலகாண்ட' வன் தமிழன். இந்தப் பரம்பரையில் வந்தவர்கள் இடைக்காலத்தில் ஏற்பட்ட அடிமைத்தளையை அறுத்துச் சுதந்திரம் கண்ட பின்னரும் தம் தாய்மொழியை அரியாசனத்தில் ஏற்றிக் காணத் தயங்குவது அழகா? ஆண்மையா? நம்மை விட்டுச் சென்ற ஆந்திரர்கள், தம் முதல் நாள் கூட்டத்திலேயே சட்டசபையில் ஒருவர் நீங்கலாக அனைவரும் தெலுங்கில் பேசினார்கள் என்று பத்திரிகையில் படித்தோமே. இனியாவது நமக்குப் புத்தி வர வேண்டாமா? ஆகவே, காலமும் வேளையும் பார்த்துக்கொண்டிராமல் அரசியல் நடவடிக்கைகள் யாவும் உடனடியாகவே தமிழில் கொண்டுவர வேண்டும்.

அதோடு, தாய்மொழி வளம் பெறுவதற்கான அடிப்படைக் காரியங்களையும் இப்பொழுதே செய்துவரல் நலம். நம் நாட்டில் ஆறுவது படிவம் வரை தாய்மொழி மூலம் கல்வி போதிக்கப் பட்டு வருகிறது. ஆனால் கல்லூரிக்குப் போனதும் அம்முறை அடியோடு மாறுகின்றது, எல்லாப் பாடங்களும் அங்கே ஆங்கிலத்தில் கற்பிக்கப்படுகின்றன. திடீரென்று ஏற்படும் இந்த மாற்றத்தை மாணவர்கள் தாங்கிக் கொள்ள இயலாதவர்களாகின்றனர். எனவே, அவர்கள் கண்களைக் கட்டி காட்டில் விடப்பட்டவர் போன்ற நிலையை அடைகிறார்கள். கல்லூரிப் பாடங்கள் அவர்களுக்கு எட்டிப்பிடிக்க முடியாதவையாகின்றன. இதனால் ஊக்கமும் உணர்வும் குன்றி வெறுப்பு மேலீட்டாலோ, தோல்வி மனப்பான்மையாலோ கல்லூரியை விட்டு வெளியேறும் மாணவர் பலராகிறார்கள்.

'கல்லூரிகளிலும் ஆங்கில மொழிந்த பாடங்களைத் தமிழிலே கற்பித்தால் என்ன' என்று கேட்கிறேன். அதற்குப் புத்தகங்கள் இல்லையே என்று சொல்லலாம். தேவை ஏற்படாமையால் புத்தகங்கள் தோன்றவில்லை. அவ்வளவுதான். நம் நாட்டில் ஒவ்வொரு துறையிலும் வல்ல அறிஞர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்களைத் தூண்டினால்—ஊக்கினால் புத்தகமா தோன்றாது? அத்தகையோரைப் பொறுக்கியெடுத்துப் பாடவாரியாகக் குழுக்கள் அமைக்க வேண்டும். அக் குழுவினரின் மூலம் பல் வேறு துறைகளுக்கும் உரிய நூல்களைத் தோற்றுவிக்கலாம். அவர்களைக் கொண்டே பிற மொழி நூல்களை மொழிபெயர்க்கவும் செய்யலாம்.

மொழிபெயர்ப்பென்பது எளிதான வேலையல்ல. மூலபாடம் எழுதவல்ல ஆற்றலுடையவர்களே மொழிபெயர்ப்பில் இறங்க முடியும். மூலபாடம் எழுதுபவர்க்காயினும் ஒரு மொழிப் பயிற்சி போதுமானது. மொழிபெயர்ப்பாளர்கோ இரு மொழிகளிலும் தேர்ந்த கல்வி ஞானம் இருக்க வேண்டுவது இன்றியமையாதது. சொல்லுக்குச் சொல் பெயர்த்தடுக்குவது மொழி பெயர்ப்பாகாது. பெயர்க்கப்பட வேண்

டியது பொருளே. அங்ஙனம் பெயர்க்கும்போது அவ்வந்நாட்டு வழக்குகளையும் மரபுகளையும் நன்கு தெரிந்திருத்தல் அவசியம்.

'Car festival' என்ற தொடரை நாம் கேட்ட அளவில் அலங்கரிக்கப்பட்ட தேர் தெரு வீதியிலே அசைந்துவரும் கோலாகலக் காட்சி நம் கண்முன்னே வந்து நிற்பது இயல்பு. இதே தொடரை ஆங்கிலேயரிடையிலோ, அமெரிக்கரிடையிலோ சொன்னால் அவர்கள் நினைவில் என்ன தோன்றும்? வரிசை வரிசையாக மோட்டார்கள் ஊர்வலம் செல்லும் காட்சிதான் அவர்களுக்குத் தோன்றக் கூடும். தொடர் ஒன்றாக இருந்தும் இடத்துக் கேற்றவாறு இரு வேறு வகைப்பட்ட பொருள் தந்து நிற்பதை இங்கே பார்க்கிறோம். அதனால்தான் மரபறிந்து, வழக்கறிந்து சொற்களை ஆள வேண்டுமென்று சொன்னேன்.

கல்லூரிப் பாடங்கள் மட்டுமல்ல, விஞ்ஞானத் துறையிலுள்ள எந்த வகை நூல்களாயினும் அவையும், சட்டம் மருத்துவம் போன்றவைகளும் தமிழாக்கப்பட வேண்டும். மாணவர்களுக்கேயன்றிப் பொது மக்களுக்கும் அவை பயன்படலாம். இன்று அவை தமிழறிவுமட்டுமுடையவர்களுக்கு எட்டாக் கனிகளாயிருக்கின்றன; வேத மந்திரங்களாயிருக்கின்றன. இந்நாளில் அரசியலறிவு தமிழ் மக்களிடம் மலிந்து காணப்படுதற்குக் காரணம் தமிழ்ப் பத்திரிகைகளே. அதனை எல்லோரும் புரிந்து கொள்ளும் முறையில் மிக எளிதாக எழுதிப் பரப்புகின்றன பத்திரிகைகள். ஒரு காலத்தில் அரசியலில் அரிச்சுவடி கூடத் தெரியாதவர்கள் இன்று கணிசமான அளவில் அதைப் புரிந்துகொண்டிருக்கிறார்கள். எனவே சொல்லும் முறையில் சொன்னால்விளங்கிக் கொள்ள முடியாததொன்று இருப்பதற்கில்லை. நாளை மருத்துவமும் சட்டமும் மொழிபெயர்க்கப்பட்டுக் கடை வீதிக்கு வருமானால் எத்தனையோ பேர் அவற்றைப் படித்துப் பயன்பெறுவார்கள் என்பது திண்ணம். அன்றியும் படித்தவர் மூலம் படியாத வேறு பலரும் அந்த அறிவொளியை நுகரும் வாய்ப்பைப் பெறுவார்கள். 'பிற நாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் யெயர்த்தல் வேண்டும்' என்னும் பாரதியாரின் அறிவுரையைப் பண்ணோடு திருப்பித் திருப்பிப் பாடிக் கொண்டிருந்தால் போதுமா? செயல் முறையில் காட்டவேண்டாமா? ஆகவே ஆவன செய்து ஆக்கம் தேடித் தர அரசாங்கம் முயலுமாக; அதற்கு ஆண்டவன் அருள் புரிவாராக.

---

## உண்மைக் கல்வி

இயந்திரம் ஒரு மிகப் பெரிய ஆசிரியர். ஒரு குதிரையோ, அல்லது கழுதையோ வேலை செய்ய மறுத்தால் மனிதன் உடன் ஆத்திரமடைகிறான். அவைகளை அடி அடி என்று அடிக்கிறான், ஆனால் இயந்திரம் வேலை செய்யாமல் நின்று விட்டாலோ அதை அடித்து வேலை வாங்க முடியாது. அடிப்பதில் பிரயோஜனம் இல்லை. இயந்திரத்தில் என்ன கோளாறு என்று ஆர அமர உட்கார்ந்து யோசிக்க வேண்டும். கோளாறைக் கண்டுபிடித்து நிவர்த்திக்க வேண்டும். இதுதான் உண்மையான கல்வி.

**டாக்டர் கில்பர்ட் மர்ரே**

# விடுதலை



ச. கு. பரமசிவம்

இன்றோடு எட்டு நாளாகி விட்டது. இன்னும் அடைமழை விட்ட பாடில்லை. இப்படி எத்தனை நாட்கள் தான் பெய்யப் போகிறதோ? தெரியவில்லையே என்று அங்கலாய்த்தாள் அங்கமுத்துவின் மனைவி செங்கமலம். அங்கமுத்து தூத்துக்குடி உப்பளத்தில் ஓர் சாதாரணக் கூலி. தினசரி இரண்டு ரூபாய்க்குக் குறையாமல் கொண்டு வந்து கொடுத்தால் தான் வீட்டில் விளக்கேற்ற முடியும்.

அவனுடைய முப்பதாவது வயது கழிவதற்கு முன்பே ஆறு குழந்தைகளுக்குத் தந்தையாகி விட்டான். அவனுடைய அதிர்ஷ்டமோ? துர் அதிர்ஷ்டமோ? அந்த ஆறும் உயிரோடு இருந்தது. மூத்த குழந்தைக்கு இன்னும் பத்து வயது ஆகவில்லை. இன்னும் நாலைந்து வருடம் கழித்து விட்டால் அவனும் தன்னோடு வேலைக்கு வந்து விடுவான். அவனும் தானுமாகச் சம்பாதித்தால் குடும்பக் கஷ்டம் தீர்ந்து விடும் என்று மனப்பால் குடித்தான்.

செங்கமலமும் சும்மா இருக்கவில்லை. தன்னாலான மட்டும் எட்டணா பத்தணா என்று கொண்டு வருவாள். தன் குடும்பத்திற்கு சுமையாக இருக்காமல் இப்படியாவது உதவமுடிகிறதே என்று பெருமைப் படுவாள். ஆனால் இப்போது குழந்தை பெற்று இரண்டு மாதமே ஆகி இருந்தது. நல்ல உணவும் வசதியும் இல்லாததால் இன்னும் அவள் உடம்பு தேறி வேலைக்குப் போக முடியவில்லை. மூத்த மகனை ராமகிருஷ்ணனே அவளுக்கு வேண்டிய ஒத்தாசைகளைச் செய்து வந்தான். அவனுக்கு அடுத்தவன் அழகுமலை கொஞ்சம் தறுதலை. அவன் முளைத்ததிலிருந்தே வீட்டில் அனர்த்தம் பிறந்தது என்று சொல்வார்கள். அவன் எப்போதுமே சாப்பிட மட்டும்தான் வீட்டிற்கு வருவான். மற்ற வேளைகளில் கோலியும் பம்பரமுமாய் சுற்றி அலைவது தான் வேலை. படிப்பும் வரவில்லை. வேலை செய்யும் வயதும் இல்லை. அவனால் குடும்பத்திற்கு லாபத்தைவிட நஷ்டம் தான் அதிகம். வீட்டிற்கு அடங்க மாட்டான். விடிந்தால் போய், அடைந்தால் வருகிற அங்கமுத்துவுக்கு அவனைக் கண்டிக்கவும் வாய்ப்பில்லை. அழகுமலைக்கு பிந்திய குழந்தைகள் நான்கும் செலவுக்கு ஆனவை தான். இதையெல்லாம் நினைத்துப் பார்த்துக் கொண்டே வாசலோரம் ஒட்டுத் திண்ணையில் அமர்ந்திருந்தான் அங்கமுத்து. வீட்டினுள்ளே கதவோரம் நின்று கொண்டே

---

இந்தக் குழந்தை வாழ்ந்துதான் என்ன சுகத்தைக் காணப் போகிறது? செங்கமலம் இப்படித்தான் கேட்டாள். ஆனால் இயற்கையாகவே குழந்தைக்கு ஆபத்து வந்தபோது...?

அவன் மனைவி முக்கலும் முனக லுமாய் ஏதோ கூறிக்கொண்டிருந்தாள். அதை எல்லாம் கவனிக்காமல் கூரையிலிருந்து ஒழுகிக் கொண்டிருந்த சிறு சிறு மழைத்துளிகளையும் அவையெல்லாம் சேர்ந்து சேறும் சகதியுமாகத் தெருவிலே புரண்டு சிறிது தூரத்திலே ஒரு குட்டையில் விழுவதையும், குளம் நிறைந்து பூரிப்பதையும் பார்த்துக் கொண்டே இருந்தான். அந்தச் சாதாரண நிகழ்ச்சி அவன் நெஞ்சிலே யாரும் கற்றுக் கொடுக்காத தத்துவத்தைக் கற்பித்தது. லட்சக் கணக்கான மக்களின் உழைப்பெல்லாம் கூடி லட்சாதிபதிகளை உண்டாக்கும் தத்துவம் அதில் அடங்கி இருப்பதாக எண்ணினான்.

செங்கமலம் உள்ளிருந்தே சற்று உரத்தகுரலில் பேசினாள். "என்ன? இப்படியே இருந்தால் என்ன அர்த்தம்?" அங்கமுத்து உணர்வு பெற்றான். எனினும் அந்த மழைத் தத்துவம் மாறி விடவில்லை. அதைத் தன் மனைவிக்கும் சொல்ல விரும்பினான். "பார்த்தாயா செங்கு! சிறு துளிகளெல்லாம் சேர்ந்து அந்தக் குட்டையே நிறைந்து விட்டது இப்படித்தான்........." அவன் பேச்சை முடிக்கவில்லை. செங்கமலம் குறுக்கிட்டு "ஆமாம் அந்தக் குட்டை மட்டுமா? நம் வீடு கூடத்தான். கூரையிலே விழுந்தநீர் ஒன்றுகூட வெளியே போகவில்லை அத்தனையும் உள்ளே தான் ஒழுகி இருக்கிறது. அங்கே பாருங்கள் அந்த இரண்டுகுழந்தைகளும் கிடக்கும் நிலையை. ஈரத்திலே படுத்துத் தூங்கியதால் கால்களும் கைகளும் சுருங்கி வெளிரிவிட்டது. பாவம். பச்சைக் குழந்தை! என்ன பாவம் செய்ததோ இங்கே வந்து பிறந்து விட்டது எத்தனையோ பேர் பிள்ளைக்காக ஏங்கித் தவம் கிடக்கிறார்களே. அங்கே பிறந்திருக்கக் கூடாதா? இந்த வேளையில் எத்தனையோ சுகங்கள் காத்துக் கிடக்குமே? இரவும் பகலும் என் ஈரமற்ற மார்பைச் சுவைத்துச் சுவைத்து அதன் மார்பும் வற்றி இருக்குமே? அவை வாழ்ந்து தான் என்ன சுகம் காணப்போகிறது." செங்கமலம் வேதனை தாங்காமல் குமுறினாள். அங்கமுத்து தான் என்ன செய்வான். அத்தனையையும் நிம்மதியாகக் கேட்டான். அவனால் எதுவும் கூற முடியவில்லை. அவளும் ஓர் நல்ல இடத்திலே வாழ்க்கைப் பட்டிருந்தால் சுகம் பெற்றிருக்கத்தான் செய்வாள். இப்போது அதைப் பேசி என்ன பயன். என்று மனதிற்குள் எண்ணியவாறு மெல்லச் சிரித்தான்.

மாலை மயங்கியது. இரவு வர எங்கும் இருள் பரவியது. இன்னும் மழை பிசுபிசுத்துக் கொண்டே இருந்தது. செங்கமலம் தன் குழந்தைகளை ஒவ்வொன்றாகத் தூங்கச்செய்தாள். ராமகிருஷ்ணன் தன் குடும்பத்தின் நிலை தெரிந்து கொண்டவன் வீட்டில் இடமிருக்காது என்பதை அறிந்தே பெரிய பண்ணைச் சத்திரத்திலே படுத்துக் கொண்டான். அழகுமலை மாலையிலேயே அடம்பிடித்து அரையணா வாங்கிக் கொண்டு போனவன் இன்னும் வரவில்லை. அவனும் எங்காவது படுத்துத் தூங்கி இருப்பான். தன்னுடைய குழந்தைகள் இப்படித் தலைக்கொரு காட்டில் கிடப்பதை எண்ணியும் எண்ணாதது போல கடைசிக் குழந்தைக்கு ஓர் ஒழுகாத இடத்திலே தொட்டிலைக் கட்டுவதற்கு முயற்சித்

துக் கொண்டிருந்தாள் செங்கமலம். அங்கமுத்து நிம்மதியாகச் சுருட்டுப் புகையை ரசித்தவாரே தன் மனைவி கிழிந்த இரண்டு துணிகளை ஒட்டுச் சேர்த்து தொட்டில் கட்டி அதிலே சாபத் தீட்டைப் போல தரித்திரத்திலே பிறந்து, தனக்குத் தொல்லையாக இருக்கும் ஓர் ஜீவனைப் போட்டு தூங்க வைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

மேலே இருந்து ஒழுகி வரும் மழைத்துளி குழந்தையின்மேல் விழாமல் தொட்டிலைச் சுற்றி ஓர் கந்தலைக் கட்டி வைத்தாள். ஒருவாறு தன் குழந்தைக்கு வசதி செய்து விட்டதாக ஆறுதல் கொண்டவளாகத் தனக்கும் புருஷனுக்கும் படுக்கை விரிக்க ஆரம்பித்தாள்.

ஓர் கிழிந்த கோரைப்பாய், அதுவும் தொப்பலாக நனைந்திருந்தது. பாயை உதறிப் போட்டாள். உடுத்தி இருந்த கந்தலை இழுத்திப் போர்த்தி ஒருபக்கத்தில் முடங்கினாள். அங்கமுத்துவும் அவளருகில் படுத்துக் கொண்டான். வாடையும் குளிரும் வதைத்தது. இந்த தம்பதிகளின் துயரைச் சகிக்காமல் சுவரும், தரையும் கண்ணீர் விடுவதைப்போல் நீரைக் கசிந்து கொண்டிருந்தது. தூரத்தில் ஓடிக்கொண்டிருக்கும் சாக்கடை நீர் ஓடையிருந்து தவளை கரகர என்று கத்துவதும் அதற்குச் சுதி கூட்டுவது போல பக்கத்து பனந்தோப்பிலிருந்து வண்டுகளின் ஙொய் என்ற ஒலியும் தவிர ஊரே அடங்கி ஒடுங்கி ஒரே பயங்கர அமைதியில் ஆழ்ந்திருந்தது. அங்கமுத்துவின் மனதில் என்றுமில்லாத விசித்திர வேதனைபடர்ந்திருந்தது. எதையும் சிந்திக்க முடியாதவனாய் இருந்தான். நெஞ்சிலே இருந்த சூடு மாறி ஒருவித குளிர்ச்சி கண்டது. கையும் காலும் குளிரினால் குரக்கு வலித்தது. பக்கத்திலே படுத்திருந்த மனைவியை அணைத்துக்கொண்டான். அவளுடலும் வெடவெடத்துக் கொண்டிருந்தது. அணைக்க அணைக்க ஒருவிதச் சூடு ஏறத்தான் செய்தது. சற்றுகுளிரும் வாடையும் குறைந்ததைப் போல் இருந்தது. செங்கமலத்திற்கு ஒருவித அச்சம். பச்சைப் பிள்ளைக்காரி இம்மாதிரி இருக்கக் கூடாதே. இந்த நேரத்திலே இது விபரீதமாக நடந்தால் இன்னும் குழந்தைகளைப் பெற்றுக் கொண்டிருக்கவா? அதுவும் இதைச் சவலைப்பிள்ளையாக்கவா? எதை எதையோ எண்ணினாள். ஆனால் இந்தத் தாங்க முடியாத குளிரிலே போர்த்திக் கொள்ள ஆடையில்லாத போது அவனுடைய அணைப்பு எவ்வளவு உதவியாக இருக்கிறது. இதை எப்படி உதறித்தள்ள முடியும். எப்படியானாலும் சரி என்று ஒருவித வரட்டுச் சமாதானத்தோடு நெருங்கிக் கொண்டாள். நேரம் ஆக ஆக மழை வலுத்துக் கொண்டே இருந்தது. வீட்டைச் சுற்றிலும் மழைநீர் ஆறுபோல ஓடிப் பெருக்கெடுத்தது. சுவற்றிலே ஒருபகுதியில் நெறு நெறு என்று ஒருவித சப்தம் கேட்டுக் கொண்டிருந்தது. இடைவிடாமல் எட்டு நாட்களாய் பெய்த மழையிலே சுவர் நனைந்து பொருமி ஆரம்பித்தது. இரவும் பகலும் வேதனையிலே நைந்து போன ஏழையின் நெஞ்சைப் போல முனகிக்கொண்டே இருந்தது. இன்னும் தாக்குப் பிடிப்பது சாத்தியமல்ல என்ற நிலைமையிலே அந்த ஏழைச் சுவர் சர சர வென்று சரிய ஆரம்பித்தது. வீட்டினுள் தூங்கிக் கொண்டிருந்த எல்

லோரும் திடுக்கிட்டு அலறி யடித்துக் கொண்டு எழுந்தனர். அங்கமுத்து தன் மேலே படிந் திருந்த மண்ணையெல்லாம் தள்ளி விட்டு குழந்தைகளை அப் புறப்படுத்த ஆரம்பித்தான். குழந்தைகள் ஒன்றும் தோன்று மல் வாயடைத்து நின்றன. செங்கமலம் அர்த்தமில்லாமல் அலற ஆரம்பித்தாள். அங்க முத்து அவசர அவசரமாக அங்குமிங்கும் தேடினன். குழந் தை படுத்திருந்த தொட்டிலைக் காணும். மனைவியிடம் கேட்க விரும்பினன்.கேட்க வாயெழும்ப வில்லை. பதறிப் பதறி 'எங்கே? எங்கே?' என்று அலறி னன். அவளுக்கு ஒன்றும் புரிய வில்லை. ஐய்யோ முறை யோ என்று கத்தத்தான் செய் தாள். ஆத்திரமாத்திரமாகச் சரிந்து கிடைந்த மண்ணைத் தள்ளினன். அய்யோ! அந்த அதிர்ஷ்டக்காரக் குழந்தை அங்கே தான் கிடந்தது. ஆனல் குழந்தையாக அல்ல,கூழையாக கிடந்தது. அங்கமுத்துவினல் அழுவதற்குக்கூட முடியவில்லை. நேரம் மெள்ள மெள்ள விடிந் தது. இடிந்து கிடந்த வீட்டைச் சுற்றி எத்தனையோ மக்கள் கூடி விட்டார்கள். இறந்து கிடந்த குழந்தையைக் கண்டு கண்ணீர் விடாதவர்கள் இல்லை. பத்திரிக் கைக்காரர் ஒருவர் இதை யெல் லாம் உருக்கமாகத் தகவல் சேகரித்துக் கொண்டிருந்தார். அங்கமுத்து எதுவும் பேசாமல் அழுது அரற்றிக் கொண்டிருக் கும் பெண்களின் கூட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் மனதிலே நேற்று மாலை யில் மனைவி கூறிய வார்த்தை கள் ஞாபகத்திற்கு வந்தது 'அது வாழ்ந்து தான் என்ன சுகம் காணப் போகிறது''. உண் மைதான்; இருக்கிற குழந்தை களை வைத்துக் காப்பாற்ற முடி யாத நிலையில் அதுவும் இருந்து ஏன் கசங்கிக் கருக வேண்டும்.

அவனுக்கு குழந்தைகள் என் ருல் ஆசைதான். அதற்காக அவனுடைய தரித்திரத்தை குழந்தைகளும் அனுபவித்து உணவும் உடையும் இல்லாமல் நைந்து நைந்து பார்க்கச் சகிக்கா மல் வாழ்வதை எப்படி அவனல் சகித்துக்கொண்டிருக்க முடியும். அதற்காகக் குழந்தைகளை அவன் கையினல் கொல்ல முடியாது தான். இயற்கை யாகவே பார்த்துத் தனக்குச் சாதகமாகவே நடந்து விட்டது. இதற்காக அவன் சந்தோஷப் பட்டாலும் சரிதானே. அந்தக் குழந்தை அதிர்ஷ்டம் உள்ள தாகத் தான் இருக்கவேண்டும். இந்த உலக வாதனையிலிருந்து அது நிம்மதியாக விடுதலை பெற்று விட்டது. அதற்காக அவன் ஏன் அழவேண்டும்? அழக் கூடாது. ஆனல் பெற்ற மனமாயிற்றே! எப்படிப் பொருத் துக் கொள்ளும்.சற்று மனதிலே வேதனையாகத் தான் இருந் தது. திரும்பவும் நினைத்துக் கொண்டான். வசதியும் செல் வாக்கும் உள்ள வீட்டிலே ஏற் படும் சாவு தான் வருந்த வேண் டியது. என்னைப் போன்ற தரித் திரர் வீட்டிலே ஏற்படும் சாவு சந்தோஷப் பட வேண்டியது தான். அங்கமுத்துவின் மனது சிறிது சாந்தமடைந்தது. நிம் மதியாக ஒரு பெருமூச்சு விட் டான். ஆம், வேறு என்னதான் செய்ய முடியும். அந்த ஏழைக்கு அந்தக் குழந்தையின் மர ணம் ஓர் விடுதலை யல்லவா ?

★★★

# ஆணும் பெண்ணும்

ஜே. பி. எஸ். ஹால்டேன்

ஆண்கள் பெண்களைப் பற்றியும், பெண்கள் ஆண்களைப் பற்றியும் கொண்டிருக்கும் துவேஷ மனப்பான்மை காரணமாக சுதந்திரம், சகோதரத்துவம், சமத்துவம் ஆகிய நோக்கங்களுக்கான போராட்டம் தடைப்படுகிறது. நம்முடைய சமூக அமைப்பில், பெண்களின் மீது ஆண்கள் துவேஷம் கொண்டிருப்பதன் விளைவாக, ஒரே விதமான வேலையைச்செய்யும் ஆண்களைவிடப் பெண்களுக்குக் குறைவான சம்பளம் கொடுப்பது போன்ற அநீதிகள் நடைபெறுகின்றன. இது போலவே, பெண்களுக்கும் ஆண்கள்மீது துவேஷம்உண்டு உதாரணமாக, பல பெண்கள் "ஆண்கள் உபயோகம் இல்லாதவர்கள், சட்டையில் பித்தானை வைத்துத் தைக்கத் தெரியாது, அழகு உணர்ச்சியற்ற முரடர்கள், குடும்பம் நடத்தத் திட்டம் இடும்போது அவர்களுடைய யோசனையைக் கேட்பதில்பயன் இல்லை'' என்று எண்ணுகிறார்கள்.

ஆண்பெண் உறவைப் பற்றிப் புத்தகங்கள் பத்திரிகைகள் இன்று தமிழ் நாட்டில் பெருகிவருகின்றன. இவைகள் ஆண்பெண் உறவைப் பற்றி மக்களுக்குப் பல தப்பான கருத்துக்களைப் பரப்புகின்றன. விஞ்ஞானி ஹால்டேனின் இந்தக் கட்டுரைத் தொடர் ஆண்பெண் உறவைப் பற்றி விஞ்ஞான பூர்வமாக ஆராய்கிறது. கட்டுரையைத் தமிழில் தருவர் ஸ்ரீ. நா. வானமாமலை



ஆண் பெண் இருவருக்கும் பால் வேற்றுமை காரணமாக என்ன குண வித்தியாசங்கள் உள்ளன என்பதை ஆராயும் முயற்சிகள் ஆரம்பநிலையிலேயே உள்ளன. ஆனல், பொதுவான தப்பெண்ணங்களைப் போக்கும் அளவுக்கு நமக்குச் சான்றுகள் கிடைத்துள்ளன இரு பாலாருக்கும் இடையே சில அடிப்படையான வேறுபாடுகள் உள்ளன. இன விருத்தியைப் பற்றிய வேறுபாடுகள் முக்கியமானவை. இது தவிர வேறு சில பண்புகளிலும் இரு பாலாரும் முற்றிலும் வேறுபடுகிறார்கள். உதாரணமாக, மீசை தாடி குரல் இவற்றிலுள்ள வேறு பாட்டைப் பாருங்கள். இதற்கு விதி விலக்குகள் இருக்கலாம். நாலைந்து குழந்தைகள் பெற்ற ஒரு பெண்ணுக்கு நீண்ட தாடி வளர்ந்திருப்பதை நான் கண்டிருக்கிறேன். ஆனல்

பெரும்பாலான உடல் அமைப்பு சம்பந்தமான அம்சங்களில் ஆணுக்கு உரியன என்று கருதப்படும் அம்சங்கள் பெண்ணுக்கும், பெண்ணுக்கே உரியன என்று கருதப்படும் அம்சங்கள் ஆணுக்கும் விரவி வருவதை வாழ்க்கையில் காண்கிறோம். பொதுவாக, பெண்களைவிட ஆண்கள் உயரமாகவும் கனமாகவும் இருக்கிறார்கள். ஆனால், ஏராளமான பெண்கள் பல ஆண்களைவிட உயரமாக இருப்பதையும், சில ஆண்கள் அநேக பெண்களைவிடக் குள்ளமாக இருப்பதையும் நாம் காண்கிறோம்.

இந்த வேறுபாடுகள் வாழ்க்கை வசதிகளையும், சூழ்நிலையையும் பொறுத்த விஷயமல்ல என்பதில் சந்தேகம் இருக்கமுடியாது. ஆங்கில நாட்டுப் பெண்கள், ஆண்களைப் போலவே சத்தான உணவு உட்கொள்ளுகிறார்கள். ஆனால், ஆண்களைவிட அவர்களின் ஆயுட்காலம் அதிகம், ஆண்களைவிட அவர்களின் எண்ணிக்கை ஆங்கில நாட்டில் கூடுதல். இருந்தபோதிலும், 1938-ல் பெண்களைவிட ஆண்களே வியாதிகளாலும், தற்கொலை, கொலை, விபத்துக்கள் மூலமும் இறந்தார்கள். தற்கொலையால் இறந்த பெண்களின் எண்ணிக்கையையும், பிள்ளைப்பேறு காரணமாக இறந்த பெண்களின் எண்ணிக்கையும் கூட்டினால் சமமாகும். ஆதலால், பெண்களின் உடல் நிலை சூழ்நிலை காரணமாகப் பாதிக்கப் படவில்லை. ஆனால், மனோசக்தி பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது. இந்தியா போன்ற நாடுகளில் நிலைமை வேறுவிதம். இந்தியாவில் பெண்களின் சராசரி ஆயுள் காலம், ஆண்களின் சராசரி ஆயுள் காலத்தைவிடக் குறைவு.

ஓட்டப் பந்தயம், நீளம் தாண்டுதல், நீச்சுப் போட்டி போன்ற உடற்பயிற்சி விளையாட்டுகளில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் வித்தியாசம் உண்டு. ஒரே வயதுள்ள சிறுவர்களையும் சிறுமிகளையும் இவற்றில் ஒப்பிட்டுப் பார்ப்போம். ஓட்டப் பந்தயம், நீளம் தாண்டுதல், இவற்றில் சராசரியாகச் சிறுவர்கள் சிறுமிகளை மிஞ்சிவிடுகிறார்கள். நூறு கெஜ பந்தய ஓட்டத்தை முதலாவதாகசிறுவர்களுக்குள் வெற்றிபெறும் சிறுவன், முதலாவதாக சிறுமிகளுக்குள் வெற்றிபெறும் சிறுமியைவிடச் சீக்கிரமே முடிப்பான். முதலாவதாக வெற்றிபெறும் சிறுமியைவிட, முதலாவதாக வெற்றிபெறும் சிறுவன் அதிக நீளம் தாண்டுவான். ஆனால், ஏராளமான சிறுமிகள் பெரும்பான்மையான சிறுவர்களைவிடச் சிறப்பாக வெற்றிபெறுவார்கள். எந்தச் சிறுவனும் அதே வயதுள்ள சிறுமியைவிட அதிகமாகத் தாண்டுவான். குறைந்த நேரத்தில் ஓட்ட தூரத்தை முடிப்பான் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. நீண்ட தூர நீச்சுப் போட்டியில் இருபாலாருடைய திறமையும் ஏறக்குறையச் சமம். நீந்துவதற்குப் பெண்களுக்கு ஒரு வசதி இருக்கிறது. ஏனெனில், அவர்களுடைய உடல் முழுதும் தோலின் அடியில் ஆண்களைவிட அதிகக் கொழுப்பு உண்டு. ஆகையால் தண்ணீரில் உடல் உஷ்ணத்தைச் சீக்கிரம் இழக்காது. ஆகையால்தான் பல பெண்கள் 17 மைல் நீளமுள்ள பிரிட்டிஷ் கால்வாயை (பிரான்சுக்கும் இங்

கிலாந்துக்கும் இடையிலுள்ள கடல்) நீந்தியிருக்கிறார்கள்.

மூளைக் கூர்மை சம்மந்தமான சில சோதனைகளில் பெண்களை விட ஆண்கள் சிறப்பாகத் தேறுகிறார்கள். வேறு சில சோதனைகளில் பெண்கள் ஆண்களைத் தோற்கடித்து விடுகிறார்கள். உதாரணமாக, சொற்களைத் திறமையாகப் பயன்படுத்த வேண்டிய சோதனைகளில் ஆண்களைப் பெண்கள் மிஞ்சுகிறார்கள். இயந்திரங்களைப் பற்றிய சோதனைகளில் ஆண்கள் பெண்களைவிட எளிதில் தேறுகிறார்கள். சில சோதனைகளில் ஆண்கள் எளிதாகத்தேறுவார்கள். வேறு சில சோதனைகளில் பெண்கள் எளிதாகத் தேறுவார்கள். இச் சோதனைகளிலுள்ள கேள்விகளை ஆணுக்கோ பெண்ணுக்கோ எளிதாக இருக்கும்படி அமைக்கமுடியும். மூளைக் கூர்மையில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் சராசரி அதிக வித்தியாசம் இருப்பதாக ஒரு சோதனையின் மூலம் முடிவு வந்தால், ஒன்று அந்த சோதனையிலுள்ள கேள்விகள் ஒரு பாலாருக்கு எளிதாக இருப்பவையாகத் தேர்ந்து எடுக்கப்பட்டிருக்கிறது என்றோ, அல்லது வாழ்க்கை வசதிகளில் வித்தியாசம் இருக்கிறது என்றோ நாம் உறுதியாகச் சொல்லலாம்.

இந்த சோதனைகளின் மூலம் பொதுவாக சில உண்மைகள் தெளிவாகின்றன. 87500 ஸ்காட்லண்டுச் சிறுவர் சிறுமியர்களுக்கு ஒரு சோதனை கொடுக்கப்பட்டது. சிறுவர்களும் சிறுமியர்களும் சராசரியில் சமமான மார்க்குகள் பெற்றுத் தேறினார்கள். அதிகமாக மார்க்கு வாங்கிய முதல் 875 குழந்தைகளை எடுத்துக் கொள்வோம். அதில் 517 சிறுவர்கள், 358 சிறுமிகள். இது போலவே குறைந்த மார்க் வாங்கியவர்களிலும் ஆண்கள் அதிகம், பெண்கள் குறைவு. சுய புத்தியின்மை, மடமை, ஓரளவு புத்திசுவாதீனமின்மை ஆகிய குறைகள் பெண்களை விட ஆண்களுக்குத்தான் அதிகம். இந்த முடிவு இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் உறுதிப்படுத்தப்பட்டிருக்கிறது. இதன் காரணம், பெண்களைவிட ஆண்களைப் படிக்க வைப்பதில் பெற்றோர்கள் அதிக கவனம் செலுத்துகிறார்கள் என்று சொல்லலாம். ஆனால், அது சரியல்ல. இது உண்மையானால், பெண்களைவிட புத்திக் கூர்மை குறைந்த ஆண்கள் குறைவாக அல்லவா இருக்க வேண்டும்? அப்படி இல்லையே. இந்த வித்தியாசம் அடிப்படையானது தான் என்று நான் கருதுகிறேன். இதனால், பெண்களுக்கு உயர்தரக் கல்விக்காகப் பண உதவி மறுக்கப்படுவது நியாயம் என்று நான்சொல்லவில்லை. மிகவும் திறமை படைத்த மாணவர்களுக்குக் கல்விக்குப் பண உதவி செய்வதாக வைத்துக் கொண்டால், ஏறக் குறையப் பாதிப் பெண்களுக்குக் கொடுத்தாக வேண்டுமே. அரசாங்கம் அத்தனை பெண்களுக்குப் பண உதவி கொடுப்பதில்லையே! இது நியாயமா?

அறிவில் மேதையென்ற அளவுக்கு உயர்ந்தவர்களில் பெண்களைவிட ஆண்களே அதிகம் என்றாலும், இன்று நம்முடைய சமூகத்தில் ஆண்களுடைய திறமையைவிட பெண்களின் அறிவுத் திறமையை நாம் பெரிதும் வீணாக்குகிறோம்.



# அதிசயத்திலா ஆங்காரம்

ல. சண்முக சுந்தரம்



சர்க்கரை அபூர்வமான உணவு. நம்முடைய பலகார வகைகள் பலவற்றில் அது கலந்து வியாபித்துவிட்டது.

காப்பிக்குச் சர்க்கரை இல்லாவிட்டால் ருசி இருக்குமா? அது போலத்தான் ஹல்வா, ஜிலேபி மைசூர்ப்பாகு ஒவ்வொன்றிலும் சர்க்கரை ஊடுருவி நின்று ருசி தருகிறது.

உப்புமாவோடும் வாழைப் பழத்தோடும் சர்க்கரையைச் சேர்த்துக் கொண்டால் அதன் ருசியே தனி.

குழந்தை பிறந்த வீடுதோறும் பழத்தோடு சர்க்கரையையும் சேர்த்துக் கொடுக்கிறார்கள். சர்க்கரையாலாகிய பாயாசத்தின் மீது மேலும் ஒரு கரண்டிச் சர்க்கரையைப் போட்டு விடுகிறார்கள். பழனி ஆண்டவனுடைய பஞ்சாமிர்தத்திலிருந்து லாலாக் கடை லட்டுகள் வரை ஒவ்வொரு பண்டத்தின் தலையிலும் சர்க்கரையைத் தூவிவிடுகிறார்கள்.

எல்லாம் சர்க்கரையை அனுபவிக்கிற முறையிலிருந்து உண்டானவை.

கரும்பிலிருந்து சர்க்கரையை எப்படி உற்பத்தி செய்கிறார்கள் என்பது அதிசயமான காரியம். விவசாயிகள் கரும்பை எப்படிப் பயிரிடுகிறார்கள் என்பது அதை விட அதிசயமான காரியம்.

ஆனால் பள்ளிக்கூடங்களில் இந்த அதிசயம் ஒன்றும் கிடையாது. சர்க்கரையைப் பற்றிய பாடம் வந்துவிட்டால் அங்கு ஜாவாவும் கியூபாவும் தான் வந்து நிற்கும். வருடத்திற்கு எங்கு எங்கு எத்தனை லட்சம் டன் சர்க்கரை உற்பத்தி பண்ணப்படுகிறது என்பதும் கணக்கு ரூபத்தில் வந்து போகும்.

குழந்தைகளினுடைய தோலை பிரம்பால் உரிப்பது போதாதென்று ஆசிரியன்மார்கள் கரும்பாலும் உரித்துவிடுகிறார்கள்.

இனித் தமிழைப் பார்ப்போம். அமிழ்து என்கிற வார்த்தை தான் திரிந்து திரிந்து தமிழ் என்று ஆகிவிட்டதாகச் சொல்கிறார்கள்.

ஆனால் மாணவர்களிடம் தமிழைப் பற்றிக் கேட்டாலோ அது நஞ்சு, வேம்பு, நாகப் பாம்பு என்று தான் சொல்கிறார்கள்.

இப்படி அவர்கள் சொல்லக் காரணம் என்ன. முதலாவது நாலடியார் என்பதை எடுத்துக் கொள்வோம். நாலடியாரில் பல உண்மைகள் சொல்லப்பட்டுள்ளன. எல்லாம் நமக்குத் தெரிந்த சாதாரண உண்மைகள் தான். ஆனால் அவற்றைக் கவி வந்து வெளியிடுகிற

"கவிதைகள் மந்திர சக்தி வாய்ந்தவை என்று சொல்வார்களே அது வெறும் வார்த்தையல்ல; கவிதைகள் தெய்வ சிருஷ்டியைச் சேர்ந்தவை என்று சொல்வார்களே அதுவும் வெறும் வார்த்தையல்ல. அதற்கு நாலடியாரே சான்று"



RM. MUTHIAH
ARTIST
KOTTAIYUR
(RAMNAD D'T.)

தோரணை இருக்கிறதே அது நம்மால் செய்ய முடியாத ஒரு காரியம்.

செய்யமுடியாத இந்தச் செயலும் அதிசயமும் துலங்க வேண்டுமானல் பாட்டைப் பாடவேண்டும். பாடிப் பாடி அனுபவிக்க வேண்டும்.

பள்ளிக்கூடங்களில் இது நடைபெறுகிறகாரியமா? அங்கே மாணவர்களிடம் கேட்கிறார்கள்.

நாலடியார் கீழ்க் கணக்கைச் சேர்ந்ததா.

நாலடியாரைப் பாடியது யார், அவர்(கள்) நாலடியாரைப்பாடக் காரணம் என்ன.

நாலடியார் என்று அதற்கு ஏன் பெயர் வந்தது.

இப்படிப் போதித்தால் மாணவர்கள் நஞ்சு என்று சொல்லாமல் தமிழை வேறு என்னவென்று சொல்வார்கள். அடடா! அதிசயம் விளைய வேண்டிய இடத்தில் ஆங்காரம் அல்லவா விளைந்துவிட்டது.

இனி நாலடியாரிலிருந்து சில பாடல்களை நாம் பார்க்கலாம்.

**2**

உண்மை என்பதைத் தெரிந்துவிட்டால் எது நல்லது எது கெட்டது என்கிற வித்தியாசம் மறைந்துவிடும்.

அழிக்க எண்ணிய ஒவ்வொரு காரியத்தையும் ஆசீர்வதிக்கவே தோன்றும்.

உண்மையை அறிந்தவர்களைத் தான் 'பெரியவர்கள் என்று' சொல்வது. தேவர், வானவர், உம்பர், ஞானி என்று உபசரிப்பது எல்லாம் அத்தகைய பெரியவர்களைத்தான்.

பெரியவர்களுக்குத்தான் அறிவுக்கண் என்பதாக ஒன்றுண்டு. அது மூடுவதும் கிடையாது விழிப்பதும் கிடையாது. அதனால்தான் தேவர்கள் எப்பொழுதும் கண்ணிமை மூடமாட்டார்கள் என்று சொல்வது.

தர்மமும் அதர்மமும் பின்னிக் கிடக்கும் இந்த உலக விவகாரங்களில் அந்தப் பெரியவர்களின் இதயம் கலக்காது. இந்த உலக விவகாரத்தைக் கடந்த நிலையில் தான் அவர்கள் இதயம்சென்று கலக்கும். அதனால்தான் தேவர்களுடைய பாதங்கள் பூமியில்படாது என்று நயமாகச் சொல்லி இருக்கிறது.

அப்பேர்ப்பட்ட பெரியவர்களின் நட்பைச் சம்பாதிப்பதில் எல்லோரும் போட்டி இடுவது இயல்புதானே.

இனி நாலடியார் பாடலைப் பார்க்கலாம்.

பெரியார் பெருநட்புக்
கோடல்தாம் செய்த
அரிய பொறுப்பர் என்(று)
அன்றே அரியரோ
ஒல்லென் அருவி
உயர்வரை நன்னுட
நல்ல செய்வார்க்குத் தமர்

[கோடல் – பெறுதல், அரிய – குற்றம், நல்ல செய்வார்க்கு – கெட்டவர்களுக்கும் நன்மையையேசெய்யும் பெரியவர்களுக்கு. தமர் அரியரோ – நண்பர்கள் பெருகுவது ஆச்சர்யம் அல்லவே இயல்புதானே.]

"நல்ல செய்வார்க்குத் தமர்"

என்பது அபூர்வமான உண்மை. அதை நம்முடைய நாவு சொல்லிச் சொல்லிப் பழக வேண்டும் என்பது கவிஞருடைய ஆசை.

அப்படியானல் அதற்குத் தனியான ஸ்தானம் அல்லவா கொடுக்க வேண்டும். அதற்காக எடுத்த விஷயத்தை 'அரியரோ' என்பதோடு முடித்து

ஒதுக்கிவிட்டு மூன்ருவது வரியில் பாண்டியனை அழைக்கிருர். அப்படி அழைப்பதன் மூலமாக "நல்ல செய்வார்க்குத் தமர்" என்பது தனியான ஸ்தானத்தில் விழுந்து விடுகிறது. இப்படி முடித்துக் காட்டுவது கவிதையின் அதிநுட்பமான செயல்

பாண்டியனுடைய பூமியில் மலைகளும் குன்றுகளும் ஏராளமாய் இருக்கின்றன. அருவிகளும் 'சோவென்று' விழுந்து கொண்டே இருக்கின்றன. கவிஞர் அவற்றை அற்புதமாக அனுபவித்திருக்கிருர்.

'ஒல்லென் அருவி உயர்வரை நல்நாட' என்று அழைப்பதிலிருந்து அது நன்ருகத் தெரிகிறது.

ஃ ஃ ஃ ஃ

இனி வேருெரு பாடலைப் பார்ப்போம்.

பிரபு ஒருவர் இருந்தார். அவரிடம் யாரும் எதையும் வாங்கி வந்தது கிடையாது. எச்சில் கையால் காக்காய் விரட்டாத பேர்வழி அவர்.

பிரபு மூன்ருவது மாடியில் இருந்தார். பிரபுவை அவசரமாகப் பார்க்க வேண்டும் என்று கீழே ஒருவன் துடிக்கிருன். காவல்காரனே விடமாட்டேன் என்று விரட்டுகிருன்.

அந்த ஆசாமி காவல்காரனிடம் கெஞ்சினுன், கூத்தாடினுன், பிரபு இருக்கும் இடத்திற்கும் வந்து விட்டான்.

பிறகு தன் பையிலிருந்த கடுதாசியைப் பிரபுவிடம் நீட்டினுன். பிரபு படித்துப் பார்த்தார். பெருமூச்சுவிட்டார். இருநூறு ரூபாயையும் எடுத்துக் கொடுத்து விட்டார். ஆசாமியும் போய் விட்டான்.

பிரபுவினுடைய வழக்கு கோர்ட்டில் நடந்து கொண்டிருந்த சமயம் அது. பிரபுவினுடைய உயிர் நாடி முழுவதும் அவருடைய வக்கீலிடம் இருந்த காலம் அது.

ஆசாமி வக்கீலிடமிருந்தே கடிதத்தை வாங்கிவந்துவிட்டான். பிரபு தப்பமுடியுமா? கடிதம் வாங்கி வந்தவனைப் பேர்ன்ற அசகாய சூரர்களை நாலடி ஆசிரியரும் பார்த்திருக்கிருர். அடாடா இவர்கள் கல்லிலிருந்து நார் உரிப்பதோடு நிற்காமல்த் தேனும் அல்லவா எடுத்துவிடுகிருர்கள், என்று வியந்தும் இருக்கிருர். அந்த வியப்பு பாடலாக வருகிறது.

> நீரினும் நுண்ணிது
> நெய் என்பர் நெய்யினும்
> ஆரும் அறிவர்
> புகை நுட்பம், தேரின்
> நிரப்பிடும்பை யாளன்
> புகுமே புகையும்
> புக்ற்(கு) அரிய பூழை
> நுழைந்து

[நுண்ணிது–நுண்மையானது. நெய் – எண்ணெய். தேரின் – ஆராய்ந்து பார்த்தால். நிரப்பிடும்பையாளன் – தரித்திரன். புகும் – போய்விடுவான். புகற்கரிய – நுழையமுடியாத. பூழை வாசல் வழியாக.]

பாடலைப் பாடப்பாட நம்மைக் கிறக்கிவிடும் முதல் இரண்டு வரிகளும் தயங்கித் தயங்கி வருகின்றன. 'நெய்யினும்' 'ஆரும்' 'தேரின்' என்கின்ற வார்த்தைகள் தயக்கத்தை அருமையாய் எடுத்துக்காட்டுகின்றன.

'புகுமே' என்று முடித்து 'புகையும்' என்று நிறுத்தி "புகற்கரிய பூழை நுழைந்து" என்று சொல்வதில் ஹாஸ்யம் அற்புதமாக வடிவெடுத்திருக்கிறது.

ஃ ஃ ஃ ஃ

தாவிக்குதிப்பதற்குச் சில இடங்களில் மிதிகல் போட்

டிருப்பார்களே, அப்படி மிதிகல்லாய் விழுந்திருக்கிறது 'தேரின்' என்ற தனிச்சீர்.

இனி வேருெரு பாடலைப் பார்ப்போம்.

அறிவாளிகள் எந்த விஷயத்தையும் அளந்து பேசுவார்கள். அரைகுறைப் படிப்பாளிகள் இருக்கிருர்களே அவர்களுடைய காரியம் அப்படி அல்ல. தெரிந்ததோ தெரியாததோ எதை வேண்டுமானுலும் விளாசி விடுவார்கள்.

பேச்சும் ஒரு துறையில் நிற்காது. அரசியலைப் பற்றிப் பேசும் பொழுது தத்துவத்திற்குள் இறங்கிவிடுவார்கள். தத்துவத்திற்கு வரும் பொழுதோ வைத்தியத்திற்குள் பாய்ந்து விடுவார்கள்.

அவர்கள் பொருளாதாரத்தில் முங்குவார்கள், ஆஸ்திகத்தில் நீந்துவார்கள், நாஸ்திகத்தில் மிதப்பார்கள். எல்லாம் விஞடிக் கணக்கில்தான்.

இப்பேர்ப்பட்ட பேர்வழிகளிடம் நாம் அகப்பட்டுக் கொண்டால் நேரம் ஒரு நாழிகைதான் என்ருலும் மரணுவஸ்தைதான், சித்திரவதைதான்.

தங்கள் நாற்றம் பிடித்த வாயை அவர்கள் மூடவும் மாட்டார்கள். நம்மால் அதைச் சகிக்கவும் முடியாது.

பாடலைப் பார்ப்போம்.

கற்றறிந்த நாவினுர்
சொல்லார்தம் சோர்வஞ்சி
மற்றையார் ஆவர்
பகர்வர், பனையின்மேல்
வற்றிய ஓலை
சல சலக்கும், எஞ்ஞான்றும்
பச் சோலைக்கு இல்லை ஒலி

[சொல்லலார் — வேண்டாததைப் பேச மாட்டார்கள்.

மற்றையார் ஆவர் — அறிவில்லாத அரைகுறைப் படிப்பாளிகள்.

பகர்வர் — வேண்டாததையே பேசிக் கொண்டிருப்பார்கள்.

எஞ்ஞான்றும் — இன்றல்ல நேற்றல்ல ஊழி ஊழி காலமாகத்தானே.]

'கற்றறிந்த நாவினுர்' என்று சொல்வதில் மரியாதை தொனிக்கிறது. 'மற்றையார் ஆவர்' என்று வேறுபடுத்துவது ஆசாரமான முறை. 'பனையின் மேல்' என்பதைத்தனிச்சீரில் வைத்திருப்பது பனைமரத்தையே தூக்கிக் காட்டுகிறது. 'எஞ்ஞான்றும்' என்பதை வற்றிய ஓலைக்கும் பச்சோலைக்கும் மத்தியில் போட்டுப் பிரிவினை செய்திருப்பது அருமையான உத்தி. ஒலி என்பதைப் பரிவொடு கடைசியில் சொல்லியிருக்கிறது அற்புதமான முறை.

அறிவாளிகள் மீது நம்மை அறியாமலேயே நமக்கு ஒரு மரியாதை ஏற்படுகிறது. கௌரவமாக அவர்களைப் பூஜிக்க வேண்டுமென்று அது நம்மைத் தூண்டுகிறது.

எல்லாம் பாடல் செய்கிற காரியம். அது பாடப் பாடத்தான் தெரியும்.

கவிதைகள் மந்திர சக்தி வாய்ந்தவை என்று சொல்வார்களே, அது வெறும் வார்த்தை அல்ல. கவிதைகள் தெய்வ சிருஷ்டியைச் சேர்ந்தவை என்று சொல்வார்களே அதுவும் வெறும் வார்த்தை அல்ல. அதற்கு நாலடியாரே சான்று.

# கம்பன் உலகமகா கவி

வெ. ராமசாமி



கம்பராமாயணம் தமிழில் தலை சிறந்த காவியம் என்பதை யாரும் ஒப்புக்கொள்ளுவார்கள். இந்த மகா காவியத்தின் சிறப்பை எடுத்துச் சொல்லாத தமிழன் இருக்க முடியாது. பண்டிதர்கள், பாமரர்கள், ஆண்கள், பெண்கள் யாவரும் ஒருங்கே ரசிக்கும் இந்த அற்புதமான நூலை இயற்றிய கம்பரைப் பற்றி நமக்கு அவ்வளவாகத் தெரியாது. ஆயினும் ஒரு கவிஞன் தன் கவிதையிலேயேதான் வாழ்கிறான். தன் அபிலாஷைகளையும் இலட்சியத்தையும் தன் கவிதையின் மூலமாகக் காட்டாத கவிஞன் ஒரு மகா கவி ஆகமாட்டான். கம்பராமாயணத்தின் மூலம் கம்பனின் இனத்தை நாம் நிச்சயமாக அறிய முடிகிறது என்பதையேதான் நான் கூற விரும்புகிறேன். ஆதாரங்கள் மூலம் இதை நாம் எடுத்துக் காட்ட முடியும்.

கம்பர் வாழ்ந்த காலத்தில் அவர் மிகவும் முற்போக்கான எண்ணங்களைக் கொண்டவராக இருந்தார். மக்களின் சக்திதான் எல்லாவற்றையும்விட ஆற்றல் வாய்ந்த சக்தி என்பதை உணர்ந்திருந்தார். மனிதாபிமானம் நிரம்பியவராக இருந்தார். இப்படி நான் சொல்லும் போது இவை ஏதோ என் கற்பனை என்று எண்ணிவிடாதீர்கள். இந்த உண்மைகளெல்லாம் அவர் கவிதையில் நிலையாக ஊன்றி நிற்கின்றன.

கம்பர் காலத்தில் சில அரசர்கள் சர்வாதிகாரிகளாக இருந்திருக்கவேண்டும். இன்றைய முதலாளித்துவம் கலைஞர்களையும் கவிஞர்களையும் விலைக்கு வாங்க முயல்வதுபோல, அன்று அரசர்கள் சிலர் முயன்றிருக்கலாம். அம்மாதிரி சந்தர்ப்பத்தில்தான் கம்பர் சோழ ராஜனைப் பார்த்துச் சொல்லுகிறார்:

**''மன்னவனும் நீயோ? வள நாடும்**
**உன்னதோ?**
**உன்னை யறிந்தோ தமிழை ஓதினேன்?''**

என்று. சர்வாதிகார வெறி பிடித்துத் திரியும் நீயா அரசன்? நீ ஆளுவதும் ஒரு நாடா? உன்னை நினைத்தா நான் தமிழைப் பாடினேன் என்று ஒரு அரசனை எதிர்க்கும் மனத் திண்மை ஏற்படுவதென்றால் அது அவருக்கு மக்களிடத்திலுள்ள அபாரமான நம்பிக்கையைக்காட்டவில்லையா? இந்தக் கருத்தை இன்னும் நன்றாகக் காட்டியிருக்கிறார் கம்பராமாயணத்தில். 'நகர் நீங்கு படல' த்தில் ஒரு கட்டம். தசரதன் கட்டளைப்படி ராமன் காட்டுக்குப் போகும்படி ஏற்பட்டுவிட்டது என்று கேட்ட மாத்திரத்தில் அயோத்தி மக்கள் அலறிப் புடைத்துக்கொள்கிறார்கள் இந்தப் பாழாய்ப்போன நாட்டைத் தானே கைகேசிக்கு ராமன் கொடுத்தான். அதை அவள் வைத்துக் கொள்ளட்டும். காடு என்பது ஒன்று வாழ்வதற்கு நமக்கு இருக்கத்தானே செய்கிறது? ராமனோடு நாம் எல்லோரும் காட்டுக்குப் போய் அங்கு வாசம் செய்வோம். அப்படி நாம் எல்லோரும் காட்டுக்குப் போய்விட்டால் புற்றுகள் நிறைந்த அந்தக் காட்டை அயோத்தியைவிடச் சிறந்த நாடாகச் சமைத்து விடுவோம். மக்களில்லாத அயோத்தி பிறகு காடாகிவிடும்'' என்று அவர்கள் சொல்லுவதைப் பாருங்கள்.

**''கோவைப்**
**பிரியாது மொய்ந்நீண்டி**
**உற்றுறைதும் யாரும்: உறையலே**
**சில்நாளிற்**
**புற்றுடைய காடெல்லாம் நாடாகிப்**
**போம்'' என்பார்.**

புற்றுடைய காட்டைச் சீரும் சிறப்பும் வாய்ந்த நாடாக நிர்மாணிப்பதும் சீரும் சிறப்பும் வாய்ந்த நாட்டைக் காடாக்கி விடுவதும் மக்களின் சக்தியினால்தான் முடியும் என்பதை எவ்வளவு நன்றாகக் கம்பர் காட்டுகிறார், பாருங்கள்.

இந்தக் கருத்தையேதான் அவர் வேறொரு இடத்திலும் ஆணித்தரமாக ஸ்தாபித்திருக்கிறார். அரசன்தான் உயிர்



ROJA MUTHIAH
47, HOSPITAL S...
KOTTAIYUR-623 106
... DIST. TAMIL NADU, INDIA

மக்கள் உடல் என்ற தத்துவம் நிலை கொண்டிருந்த காலம் கம்பர் காலம். தமிழ்ப் புலவர்கள் எல்லாம் அப்படியே தான் சொல்லி வந்தார்கள். ஆனால் கம்பர் மகா மேதை என்பதை நன்றாக நிரூபித்து விட்டார். அரசன் வெறும் உடல்தான். மக்கள்தான் உயிர் என்ற அந்தக் காலத்துக்கு வெகு புரட்சிகர மான தத்துவத்தை கம்பர் கடைப்பிடித்தார். அரசியற் படலத்தில்,

**"செயிர்இலா உலகினிற் சென்று
நின்றுவாழ்
உயிர் எலாம் உறைவதோர் உடம்பும்
ஆயினன்"**

என்று தசரதனை வர்ணிக்கிறார். "மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்று கூறிவந்த கொள்கையை "மக்கள் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்று கம்பர் மாற்றிஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே குடியரசின் தத்துவத்தைப் புகுத்தியிருக்கிறார்.

அரசியல் கண்ணோட்டத்தோடு நோக்குவோருக்கு கம்பராமாயணத்தின் உண்மைப் பொருள் விளங்காமல் போகாது. ராமன் மக்களிடத்தில் அன்பு செலுத்துவதில் தாய்போன்றவன், அவர்களுடைய நலம்தான் அவன் நலமும். சுருங்கச் சொன்னால் மக்களுக்காக ராமன் வாழ்கிறான். ராவணனோ என்றால் மக்கள் தனக்காக வாழுவதாக எண்ணுபவன், பயங்கரமான சர்வாதிகார வெறியன். அதிகாரம்திமிர்த் தாண்டவம் ஆடுகிறது அவன் சந்நிதானத்தில். உலகத்தில் தோன்றும் இந்த இரண்டு தத்துவங்களையும், சக்திகளையும் மோத விட்டு, ராமன் என்கிற தத்துவம் வெற்றி கொள்வதாகக் காட்டுவதே கம்பர் இயற்றிய ராமாயணம் செய்கிற காரியம்.

ராமன் கேவலம் ஒரு அரசன் அல்ல அதுபோலவே ராவணன் வெறும் அரக்கர்களின் மன்னன் அல்ல. இருவரும் இரண்டு சக்திகளுக்குப் பிரதிநிதிகளாக விளங்குகிறார்கள். ராமன் மக்களுக்காக நின்று முற்போக்குச் சக்தியாக விளங்குகிறான். ராவணன் மக்களை அடக்கி ஒடுக்கும் பிற்போக்கு சக்தியாக விளங்குகிறான். இந்த உண்மையை அறிந்தால்தான் கம்பரின் மேதையும் அவருடைய மனிதாபிமானமும் புலப்படும்.

ஒரு நாடு எப்படி இருக்க வேண்டும் என்று கம்பர் எண்ணிப் பார்க்கிறார். செல்வம் எல்லோருக்கும் பொதுமையாக விளங்கும்போது பணக்காரன் ஏழை என்ற பேதம் ஏற்பட முடியாதல்லவா? இதைத்தான் சொல்லுகிறார்:

**"எல்லாரும் எல்லாப் பெரும் செல்வமும்
எய்தலாலே
இல்லாரும் இல்லை உடையாரும் இல்லை
மாதோ"**

எல்லோருக்கும் எல்லாச்செல்வமும் ஏற்பட்டு விட்டால் பொய் சொல்லுவதற்கும்; குற்றம் புரிவதற்கும் கோபத்துக்கும், வியாதிக்கும் அந்த நாட்டில் இடம் இல்லாமல் போய்விடுகிறது. கம்பரின் கற்பனையில் இன்று நாம் பேசும் பொதுவுடைமைத் தத்துவத்தின் சாயை விழுந்து கிடக்கிறது என்று சொன்னால் பிசகல்ல. இதனால் கம்பர் பொதுவுடைமை வாதி என்றோ, பொதுவுடைமைத் தத்துவத்தையே பேசினார் என்றோ நான் சொல்ல வரவில்லை: அவருக்கிருந்த மனிதாபிமானமும், முற்போக்கு எண்ணங்களும் இம்மாதிரி எண்ணும்படி தூண்டின என்றுதான் சொல்ல விரும்புகிறேன்.

மனித சமுதாயத்தில் பெரிய நம்பிக்கை கொண்டவர் கம்பர் என்று முன்னம் சொன்னேன். நமது புராணங்களில் கூட தேவர்கள் மனிதனைப் பிறந்தே தீமையைக் கொன்று நன்மையை நிலை நாட்டுகிறார்கள் என்று படிக்கிறோம். தேவர்களாக இருக்கும்போது அதைச் சாதிக்கும் சக்தி அவர்களிடம் இல்லாமல் போய்விடுகிறது. பரம்பரையாக வழங்கி வரும் இந்தப் புராணக் கதைகளும் மனிதனது சக்திதான் எல்லாவற்றையும்விடச் சிறந்த சக்தி என்பதை ஓரளவு காட்டுகிறது என்று சொல்லலாம். இந்தக் கருத்து கம்பரது இதயத்தில் மிக அற்புதமான கவிதையாக உருவெடுக்கிறது.

"வேறுள குழுவை எல்லாம்மானிடம் வென்றதன்றே" என்ற வரியில் எவ்வளவு பெருமிதத்தோடு எவ்வளவு எக்களிப்போடு வெளிப்படுகிறது என்பதைப் பாருங்கள்.

கம்பர் இயற்றிய ராமாயணம் அமரத்துவம் பொருந்தியது. தமிழ் இலக்கியத்தில் மட்டும் அன்றி உலக இலக்கியத்திலேயே தலைசிறந்த ஸ்தானம் பெறக்கூடிய தகுதி அதற்குண்டு. இத்தகைய மகா காவியத்தை நமக்குத் தந்த கம்பர் தமிழ் மக்களின் மகா கவிமட்டுமல்ல, உலக மக்களின் மகா கவி என்று கர்வத்தோடு நாம் கூறலாம். ★

RM. MUTHIAH
ARTIST
KOTTAIYUR
(RAMNAD DIST.)

ருஷ்யக்கதை

# பந்தயம்

ஆண்டன் செகாவ்

இலையுதிர் காலத்தின் இருள் நிறைந்த இரவு அது.

பதினைந்து வருஷங்களுக்கு முன்பு அதே தினத்தில் தான் அளித்த விருந்தையும், அன்று நடைபெற்ற சம்பவங்களையும் எண்ணிப் பார்த்துக்கொண்டே தன்னுடைய படிக்கும் அறையில் இங்கும் அங்கும் உலாவிக் கொண்டிருந்தான் அந்த பாங்கர்.

அந்த விருந்தில் அநேக அறிவாளிகள்கலந்துகொண்டார்கள். அவர்கள் சம்பாஷித்த விஷயங்கள் யாவும் சுவையுடன் இருந்தன. அநேக விஷயங்களுக்கிடையே தூக்குத்தண்டனை - அதாவது-உடனடியாக மரணத்தை விளைவிக்கும் தண்டனையைப் பற்றி அவர்கள் விவாதித்தார்கள். பட்டதாரிகளும், பத்திரிகைகளில் எழுதும் சிலரும் நீண்ட நேரம் அதைப்பற்றி பேசினார்கள். கிருஸ்தவர்கள் ராஜ்யத்தில் அத்தகைய ஒருதண்டனை இருக்கவே கூடாது; அது நேர்மையற்றது என்று தீர்மானித்தார்கள். மரண தண்டனைக்கு பதிலாக ஆயுள் தண்டனையைக் கையாண்டால் நல்லது என்று மற்றும் சிலர் அபிப்பிராயப் பட்டார்கள்.

ஆண்டன் செகாவ் ருஷ்ய இலக்கியகர்த்தாக்களிலே தலைசிறந்தவர். இவரை சிறுகதை மன்னர் என்று கூறுவது வழக்கம். அவர் எழுதிய புகழ்பெற்ற சிறுகதை இது. இதைத் தமிழில் தருபவர் **ஸ்ரீ. சோபனு**

விவாதம் மிகவும் காரசாரமாகப் போகவே, விருந்தளித்த பாங்கரும் தன்னை அறியாமல் விவாதத்தில் கலந்து கொண்டான். பேச்சினிடையே அவன் குறுக்கிட்டு, "நான் உங்களுடைய ஆலோசனைகளை ஏற்றுக் கொள்ள முடியாது?" என்று இயம்பினான்.

"நான் இரு தண்டனைகளையும் அனுபவித்தது கிடையாது. அவைகள் எப்படி இருக்கும் என்று பரீட்சை செய்யாமல் ஒருவன் அவைகளைப் பற்றி தீர்ப்பளிக்க அனுமதிக்கப் படுவானேயாகில், என் அபிப்பிராயம் என்ன தெரியுமா? தூக்கு தண்டனை தான் ஆயுள் தண்டனையை விட கருணை நிறைந்ததும், நேர்மையானதும் ஆகும். தூக்குத் தண்டனை குற்றவாளியை உடனடியாகக் கொன்று விடுகிறது. ஆயுள் தண்டனை வருஷக்கணக்கில் கொஞ்சம் கொஞ்சமாக அவனுடைய உயிரை உருஞ்சுகிறது. இதில் எது கருணை நிறைந்தது? சில விநாடிகளில் உயிரை அபகரித்துக் கொள்வதா, அல்லது வருஷக்கணக்கில் ஆவியை சிறிது சிறிதாகப் பிறிப்பதா?" என்று தன்னுடைய கட்சியை வலுப்படுத்த விவரித்தான் பாங்கர்.

"இரண்டுமே கருணை யற்றது தான். இரண்டும் ஒரே செயலான உயிரைப்பிரிப்பதை வெவ்வேறு விதங்களில் செய்கிறது.

மனிதனை மாய்ப்பதுதான் அவைகளின் நோக்கம் அரசாங்கம் கடவுளா? கிடையாது. தன்னால் அளிக்க முடியாத ஒன்றை அது எடுத்துக்கொள்வதற்கு உரிமை கிடையாது'' என்று விருந்தாளிகளில் ஒருவன் பேசினான்.

விருந்தினர்களுக்கிடையே ஒரு சட்டவாதி இருந்தான். அவனுக்கு அதிக மிருந்தால் வயது இருபத்தைந்து தான் இருக்கும். அவனுடைய அபிப்பிராயத்தைக் கேட்டபோது, "தூக்கு தண்டனையும், ஆயுள் தண்டனையும் ஒன்றைப் போலவே மற்றொன்றும் கருணையற்றது தான். ஆனால் என்னிடம் யாராவது 'இவைகளுள் எதை நீ அனுபவிக்க விரும்புகிறாய்' என்று தேர்ந்தெடுக்கச் சொன்னால் நான் ஆயுள் தண்டனையைத் தான் விரும்புவேன். வாழ்வை ஒரே யடியாக இழப்பதை விட, எந்த விதத்திலாவது வாழ்ந்துவிடுவது மேலல்லவா?'' என்று சொன்னான் அவன். வக்கீலின் பேச்சு பாங்கரை ஆவேசம் கொள்ளும்படிச் செய்தது.

"நிச்சயமாக அது நிஜக்கலப்பற்ற பொய். நீ ஜெயிலில் ஐந்து வருஷங்கள் கூட தங்கியிருக்க முடியாது என நான் பந்தயம் கட்டுக்கிறேன். இருபது லக்ஷம் தங்கக்கட்டிகள் நான் கொடுக்கத் தயார்'' என்று பெரும் குரலில் கத்தினான் அவன்.

"நீங்கள் அதை உண்மையாகவே கூறுவதாக இருந்தால் நானும் பந்தயம் போடுகிறேன். நீங்கள் கூறுவதுபோல ஐந்து வருஷங்களல்ல. பதினைந்து வருஷங்கள் நான் அந்த தண்டனையை அனுபவிக்கத்தயார்.'' என்று வக்கில் அந்த சவாலை ஏற்றான்.

"பதினைந்து வருஷங்களா? அவ்வளவு தான்...தீர்ந்தது! நான் இருபது லட்சங்கள் பந்தயம் வைக்கத் தயார்'' என்று உணர்ச்சி வசப்பட்டுக் கூறினான் பாங்கர்.

"நீங்கள் இருபது லட்சம் தங்கக் கட்டிகளைத்தான் பந்தயம் கட்டுகிறீர்கள். நான் என் சுதந்திரத்தையே வைக்கிறேன். நானும் பந்தயத்தை ஏற்றுக் கொள்ளுகிறேன'' என்று தன்னுடைய முடிவைத் தெரிவித்தான் சட்டம் படித்தவன்.

இந்தக் கேலிக்கிடமான பயங்கரம் நிறைந்த பந்தயம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. பல லட்சங்களுக்கு அப்போது அதிபதியாக இருந்த லேவாதேவிக் காரனுக்கு இது பரவசத்தை அளித்தாலும், அவன் மனம் மட்டும் எதையோ இழந்து விட்டது போல் அவஸ்தைப்பட்டது. உள்ளத்தில் சபலம் தட்ட ஆரம்பித்தது.

இரவு உணவு பரிமாறப் படும் போது வக்கீலிடம் வேடிக்கையாகப் பேசுவது போல் அவன் சொன்னான்; "விஷயம் தலைக்கு மீறிப் போகவில்லை. அதற்கு முன்பு சுயமாகப் புத்தியைப் பிரயோகித்து யோசனை செய்து பார். இருபது லக்ஷம் எனக்குப் பிரமாதமான தொகை அல்ல. ஆனால் உன் வாழ்க்கையில் மூன்று, நான்கு இனிமை நிறைந்த வருஷங்களை இழக்க விரும்புகிறாயா? மூன்று நான்கு வருஷங்கள் என்றுதான் நான் சொல்கிறேன். அதற்கு மேல் உன்னால் சிறைக்குள் அடைபட்டுக் கிடக்க முடியாது தண்டனைக்காகக் கட்டாயமாக

சிறைவாசம் செய்வதை விட வலிய அத்தகைய ஒன்றை ஏற்றுக் கொண்டு அனுபவிப்பது மிகவும் கடுமையாகத்தான் இருக்கும். உன் வாக்குறுதியைக் காப்பாற்ற நீ அதை அனுபவித்தாலும், உன் வாழ்க்கை பூராவுமே பாழாகிவிடுவதை சிந்தனை செய்து பார். உன முடிவிற்காக நான் பரிதாபப்படுகிறேன் ''

* * *

உலாவிக் கொண்டே பதினைந்து வருஷங்களுக்கு முன்பு நடந்த சம்பவங்களை எண்ணிப்பார்த்துக் கொண்டிருந்த பாங்கர் தனக்குள்ளேயே கேள்விகளை எழுப்பிக் கொண்டான்.

''நான் ஏன் இப்படி பந்தயம் வைத்தேன்? அதனல் என்ன நன்மை ஏற்பட்டது? வக்கீலோ தன் வாழ்க்கையில் பதினைந்து வருஷங்களை வீணாக இழக்கிறுன். என் பணமும் இருபது லட்சம் தொலைகிறது. இவைகளால் பொது ஜனங்கள் மரண தண்டனை ஆயுள் தண்டனையை விட மோசமானது என்றோ, சிலாக்கியம் என்றோ நம்பிவிடுவார்களா? கிடையாது. நிச்சயம் இவைகள் அதைச் செய்யாது. அர்த்தமற்ற குப்பைதான் பந்தயம்! என் வரையில் அது ஒரு கனவானின் சபல சித்தம். வக்கீலைப் பொருத்தவரையில் சுத்த பணத்தாசையே தவிர வேறு எதுவும் கிடையாது!'' என்று தான் எழுப்பின கேள்விகளுக்குத் தானே பதிலளித்துக் கொண்டான் அவன்.

1870-ம் வருஷம் நவம்பர் மாதம் 14-ந் தேதியன்று மாலையில் நடைபெற்ற சம்பவங்களை மீண்டும் நினைவுக்குக் கொண்டு வந்தான் பாங்கர்.

வக்கீல் தன்னுடைய சிறைவாசத்தை லேவாதேவிக்காரனின் தோட்டத்தில் இருந்த அறை ஒன்றில் கடுமையான மேற்பார்வையில் அனுபவிக்க வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. அவன் உயிருள்ள மனிதர்களைப் பார்ப்பதோ அவர்களுடைய பேச்சைக் கேட்பதோ அல்லது கடிதங்கள், செய்திப் பத்திரிக்கைகள் பெருவதோ கூடாது என்பதும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. வக்கீல் வாத்தியக் கருவி ஒன்றை வைத்துக் கொள்ளவும், புத்தகங்கள் படிக்கவும், கடிதங்கள் எழுதவும், மது அருந்தவும், புகைபிடிக்கவும் அனுமதிக்கப்பட்டான். இந்த ஒப்பந்தப்படி அவன் வெளி உலகிற்கு விஷயங்களைத் தெரியப்படுத்துவதற்கு வசதியாக ஜன்னல் ஒன்று அவ்வறையில் பிரத்யேகமாக அமைக்கப்பட்டது. அவனுக்கு புத்தகங்களோ, மதுவோ எவ்வளவு விரும்பினாலும் ஜன்னலில் ஒரு குறிப்பெழுதி வைத்தால் அதன் பிரகாரம் கிடைக்க வசதி செய்யப்பட்டது. மிகச் சிறிய விஷயங்கள் கூட மிகவும் உன்னிப்பாக கவனிக்கப்பட்டு தயாரிக்கப்பட்டிருந்த ஒப்பந்தத்தில் சிறைவாசம் தனிமையாக அனுபவிக்கப்பட வேண்டும் என்று வற்புறுத்தப் பட்டிருந்தது.

வக்கீல் தன்னுடைய ஏகாந்த வாசத்தை வரையறுக்கப்பட்ட கட்டுப் பாடுகளுடன் 1870-ம் வருஷம் நவம்பர் மாதம் 14-ம் தேதி இரவு பன்னிரெண்டு மணியிலிருந்து 1885-ம் வருஷம்

நவம்பர் மாதம் 14-ம் தேதி இரவு 12-மணி வரை அனுபவிக்க வேண்டும்; அந்தக் கட்டுப்பாட்டுகளில் இம்மியளவு அவன் மீறினாலும் சரி அல்லது குறிப்பிட்ட காலத்திற்கு இரு நிமிஷங்கள் முன்பு அவன் தப்பித்துச் சுயேச்சையாகப் போனாலும் சரி, பாங்கர் தன் பந்தயம் கூறினபடி இருபது லக்ஷம் தங்கக் கட்டிகள் கொடுக்க வேண்டியதில்லை என்று ஏகமனதாக ஒப்புக் கொள்ளப்பட்டது.

பாங்கரின் தோட்டத்தில் இருந்த வராந்தா ஒன்றை ஒட்டின அறையில் வக்கீல் 1870-ம் வருஷம் 14-ம் தேதி இரவு 12-மணிக்கு ஏகாந்தமாக விடப்பட்டான். அறைக்கதவு தாளிடப்பட்டு பூட்டப்பட்டது.

சிறைவாசத்தின் முதல் வருஷத்தை வக்கீல் மிகவும் கஷ்டத்துடன் கழித்தான். அவனுடைய குறிப்புகளைக் கொண்டு அனுமானித்தபோது ஏகாந்ததை அவனால் சகிக்க முடியவில்லை எனத் தெரிந்தது. அவனுடைய அறையில் இரவு பகல் எந்த நேரமும் பியானோ இடைவிடாமல் ஒலித்துக் கொண்டிருந்தது. மது அருந்துவதையும், புகைபிடிப்பதையும் வெறுத்திருந்தான் அவன்.

"மது, ஆசைகளைத் தூண்டி விடுகிறது. ஆசைகள் தான் சிறைப்பட்டிருப்பவரின் முக்கிய விரோதிகள். தவிரவும், சுவை மிக்க மதுவைத் தனித்துப் பருகுவதை விட பொறுமையைச் சோதிக்கும் காரியம் வேறெதும் இல்லை" என்று எழுதினான் அவன். புகையிலையின் நாற்றம் அறையினிருந்த காற்றைக் கெடுத்ததாம்! முதல் வருஷத்தில் வக்கீல் காதல் கதைகளையும், குற்றங்கள், மர்மங்கள், தமாஷ்கள் இவைகளைப் பற்றின விஷயங்கள் நிறைந்த புத்தகங்களையும் படித்தான்.

இரண்டாவது ஆண்டில் பியானோவின் ஒலி ஒரேயடியாக நின்றது. இலக்கியப் புத்தகங்களை அவன் விரும்பினான். நான்கு ஆண்டுகள் கழிந்தன. ஐந்தாவது வருஷ ஆரம்பத்தில் மீண்டும் வாத்தியத்தின் இனிய நாதம் கேட்டது. சிறைப்பட்டவன் மதுவை வேண்டினான். அவனை மறைமுகமாக கண்காணித்தவர்கள் அவன் அவ் வருஷம் பூராவும் சாப்பிட்டுக் கொண்டும், குடித்துக்கொண்டும், படுக்கையில் படுத்துக் கொண்டும் இருந்ததாகச் சொன்னார்கள். அடிக்கடி கொட்டாவி விட்டுக்கொண்டும், தனக்குத் தானே கோபமாக அரற்றிக் கொண்டும் இருந்தானும். புஸ்தகங்கள் எதுவும் அவன் படிக்கவில்லை. இரவில் சில சமயங்களில் அவன் எழுத உட்காருவான்; வெகு நேரம் வரையில் எழுதிக் கொண்டிருப்பான். ஆனால் விடியும் நேரத்தில். எல்லாவற்றையும் சுக்கு நூறாகக் கிழித்தெறிந்து விடுவான். அநேக தடவைகளில் அவனுடைய அறையிலிருந்து அழுகைக் குரல் கூட கேட்டதாக சொல்லப்பட்டது.

ஆறாவது வருஷம் பிற்பகுதியில் வக்கீல் பாஷைகள், வேதாந்தம், சரித்திரம் இவைகளில் நாட்டம் செலுத்தினான். இந்த விஷயங்களில் அவன் காட்டின ஆர்வம் வெகு தீவிரமாக இருந்தது. பாங்கர் புஸ்தகங்கள் வாங்கிக் கொடுக்க நேரமே இல்லாமல் தவித்தான். நான்கு வருஷங்களில் அவனுடைய இஷ்டப்பிரகாரம் சுமார் அறுநூறு புஸ்தகங்களுக்குக் குறை

சக்தி

வில்லாமல் வாங்கப்பட்டன. இந்த சமயத்தில் ஒருதினம் பாங்கருக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தான் வக்கீல்.

"என் அன்புள்ள காப்பாளரே

நான் இந்த வரிகளை ஆறு மொழிகளில் எழுதுகிறேன் அறிவாளிகளிடம் இதைக் காட்டுங்கள். அவர்கள் இதைப்படிக்கட்டும். இவைகளில் அவர்கள் ஒரு சிறு குற்றம் கூட காண முடியாவிட்டால் தாங்கள் தயவு செய்து தங்கள் வேலையாட்களை ஏவி தோட்டத்திலே இரண்டு வேட்டுப் போடச்சொல்லுங்கள். இந்த சத்தத்தின் மூலம் என்னுடைய முயற்சிகள் வியர்த்தமாகவில்லை என்று நான் அறிந்துகொள்ளமுடியும்.எல்லா நாடுகளிலும், எல்லா அறிஞர்களும் வெவ்வேறு மொழிகளில்தான் பேசியிருக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய உள்ளங்களிலெல்லாம் ஒரே விதமான கனல்தான் சுடர்விட்டு எரிந்திருக்கிறது. அவர்களை எல்லாம் நான் பூரணமாக அறிந்து கொள்ள முடியும் என்று ஆனந்தப்படுகிறேன். நான் அனுபவிக்கும் இந்த சுவர்க்க இன்பத்தைத் தாங்கள் அறிந்தால்...",

கடிதம் முற்றுப்பெற்றிருந்தது. வக்கீலின் ஆசை நிறைவேற்றப் பட்டது. தோட்டத்தில் இரு வேட்டுகள் போட ஆக்ஞாபித்தான் லேவாதேவிக்காரன்.

பத்து வருஷங்கள் பறந்தோடின. 1881ம் வருஷத்தில் மேஜைக்கு முன்னால் அசையாமல் உட்கார்ந்து கிருஸ்தவ வேதமான பைபிளின் பழைய ஏற்பாட்டை விடாமல் படித்தான் வக்கீல். நான்கு வருஷங்களில் அறுநூறு பெரும் புத்தகங்களைக் கரைத்துக் குடித்த அவன் எளிதில் புரிந்துகொள்ளக்கூடியதும், மிகச் சிறியதுமான அப்புஸ்தகத்தைப் படிக்க ஒரு வருஷம் செலவழித்தது பாங்கருக்கு வியப்பை அளித்தது. அந்த இடத்தை மதங்கள் வேதாந்தங்கள் இவைகளுடைய சரித்திரங்கள் பிடித்துக் கொண்டன.

கடைசி இரு ஆண்டுகளிலும் சிறைப்பட்டவன் பட்டும் படாமலும் ஏராளமான நூல்களை வாசித்தான். சில சமயங்களில் அவன் மனம் இயற்கை விஞ்ஞான புத்தகங்களில் ஈடுபடும். சிறிது நேரம் பைரனுடைய கவிதைகளையும், ஷேக்ஸ்பியரின் நாடகங்களையும் படிப்பான். அதே நேரத்தில் இரசாயனம், மருத்துவ சாஸ்திரியும், நவீனங்கள், தத்துவ வேதாந்தம் இவைகள் சம்பந்தப்பட்ட புத்தகங்கள் தேவை எனக் குறிப்பு வரும்.நடுக்கடலில் கப்பல் உடைந்து மிதக்கும் மரக்கட்டைகளுக்கிடையே நீந்திக் கொண்டு, அவைகளில் ஏதாவது ஒன்று தன்னைக் காப்பாற்றி கரை சேர்க்காதா என்று ஆவல் கொள்ளும் ஒருவனைப் போல் படித்தான் வக்கீல்.

லேவாதேவிக்காரன் மனத்திரையிலே இவ்வளவும் வந்து மறைந்தன. அவன் மூளை குழம்பிற்று.

"நாளை இரவு பன்னிரெண்டு மணிக்கு அவன் சுயேச்சை அடைந்துவிடுவான். பந்தய ஒப்பந்தப் பிரகாரம் நான் அவனுக்கு இருபது லக்ஷம் தங்கக் கட்டிகள் கொடுக்க வேண்டும். அந்தத்தொகையை அளித்தால் நான் சீரழிந்து போக வேண்டியதுதான்...அத்துடன் என்னைப்பற்றின விஷயங்கள் யாவும் தீர்ந்து போய்விடும். நான் அழிந்து விடுவேன்' அவனுடைய மனம் இந்த முடிவை

சரு 54

எண்ணிப் பார்க்கத் தைரியமற்று பயந்தது.

பதினைந்து வருடங்களுக்கு முன்பு பல லட்சங்களுக்கு உடையவன் தான் அவன். இப்போது அவன் தன்னுடைய நிலையை யோசித்துப்பார்க்கவே அஞ்சினான். இப்போது அவனைச் சுற்றி அதிகமாக இருப்பது செல்வமா, கடனா? பண்டமாற்று வியாபாரத்தில் அவன்நடத்தின சூதாட்டங்கள்; 'ஸ்பெகுலேஷ'னில் துணிந்து இறங்கி ஏமாந்தது; வயதானபோதும்கூட ஒழித்துக்கட்ட முடியாத ஆடம்பரப் போக்குகள்; இவைகள் யாவும் அவன் தொழிலைப் பாழாக்கி அவனை மந்த நிலைக்குக் கொண்டுபோய் விட்டிருந்தன. ஒரு சமயம் வியாபாரத்தில் தைரியமும், தன்நம்பிக்கையும், கர்வமும் கொண்டவனாக விளங்கின அவன், தற்போது அதில் ஏற்படும் ஒவ்வொரு மேடு பள்ளங்களைக் கண்டு நடுங்கும் சாதாரண லேவாதேவிக்காரனாக மாறியிருந்தான்.

தன் தலையைப் பிய்த்துக் கொண்டு, "எல்லாம் சாபத்தீட்டால் ஏற்பட்டவினை தான்!" என்று முணுமுணுத்தான். அவன் சிந்தனை கரைபுரண்டது. "ஏன் வக்கில் செத்துப்போகவில்லை? அவனுக்கு நாற்பது வயதுதான் ஆகிறது. என்னிடமிருந்து செப்புக் காசுகூட விடாமல் பறித்துக் கொண்டு, கல்யாணம் செய்து கொண்டு ஆனந்தமாய் வாழ்க்கை நடத்தப்போகிறான். ஆனால் நானோ......? பிச்சைக்காரனைப் போல் அலையப் போகிறேன். 'என் வாழ்க்கையை சந்தோஷமாக நடத்த தாங்கள் தான் காரணம். 'நான் உங்களுக்கு உதவி செய்கிறேன்' என்று அவன் அடிக்கடி சொல்லுவான். உதவியும் செய்வான் ...உம்...என்றால் அவைகளைத் தாங்கமுடியுமா? திவாலாகி அவமானத்துடன் வாழ்வதிலிருந்து ஒரே ஒரு வழி மூலம் தான் தப்பிக்கமுடியும்... ஆம். அந்த ஆசாமி சாக வேண்டும். வேறு எதுவும் வகை கிடையாது!" சிந்தனை முட்டிக்கொண்டது. முடிவைக் கண்டது.

கடிகாரம் மூன்று மணிகளை அடித்தது. வீட்டில் எல்லோரும் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தனர். ஜன்னலுக்கு வெளியே பனிக்கிடையே கீழே விழுந்திருந்து காய்ந்து போன இலைகள் காற்றில் சலசலத்தன. சத்தம் சிறிதும் செய்யாமல் பெட்டகத்தைத் திறந்தான் பாங்கர். பதினைந்து வருஷங்களாக தொட்டுக்கூடப் பார்க்காமல் வைத்திருந்தவக்கில்சிறைப் பட்டிருந்த அறையின் பூட்டின் சாவியை மெதுவாக எடுத்து மேலங்கியின் ஜேபியில் போட்டுகொண்டான். வீட்டைவிட்டு வெளியேறி தோட்டத்தை அடைந்தான். இருளால்போர்த்தப்பட்டிருந்த தோட்டம் குளிர் மிகுந்ததாக இருந்தது. ஊதல் காற்று தொடர்ந்து வீசி, மரங்களைச் சற்றுநேரம்கூட அசைவற்று நிற்க முடியாதபடி தொல்லைக் கொடுத்துக்கொண்டிருந்தது. கண்களைக் கசக்கிக் கொண்டு உன்னிப்பாய் பார்த்த போதுகூட பாங்கரால் பாதையையோ, தோட்டத்தை அலங்கரித்த வெள்ளை சலவைக் கற்களால் ஆன சிலைகளையோ, அல்லது தோட்டத்திலிருந்த வராந்தாவையோ அறிய முடியவில்லை. தட்டுத்தடுமாறிநடந்து சென்று வராந்தாவிற்கு அருகில் போய் நின்று கொண்டு காவலாளியை

இருமுறை அழைத்தான். அவன் குரலுக்கு பதில் கிடைக்கவில்லை. மோசமான அந்த குளிருக்குப் பயந்து அவன் தோட்ட சாமான்கள் வைக்கும் அறையிலோ, அல்லது சமையல் அறையிலோ நிம்மதியாகத் தூக்கத்தில் ஆழ்ந்திருந்தான்.

"நான் நினைக்கிறபடி விஷயங்கள் நடந்தேறினால் உடனடியாக சந்தேகம் காவலாளியின் மீதுதான் ஏற்படும்" என்று பாங்கர் நினைத்தான்.

வராந்தாவின் வாசற்படியைக் கண்டுபிடித்து, அதன் வழியாக சந்தடியற்று நடந்துகுறுகலான இடைவெளி வழியே மெதுவாக முன்னேறினான். சிறை வைக்கப்பட்டவனுடைய அறையில் கதவை அடைந்ததும் மெதுவாக வத்திக்குச்சி ஒன்றைக் கிழித்தான். அந்த மங்கிய ஒளியில் வராந்தாவில் படுக்கை ஒன்று மேலுறை அற்றுக் கிடந்தது தெரிந்தது. வேறு மனித வாடையே அங்கு வீசவில்லை. ஒரு பக்கத்தில் குளிர அடுப்பு மட்டும் லேசாக கனிந்து கொண்டிருந்தது. தீக்குச்சி எரிந்து மடிந்தது. வக்கீலின் அறையின் ஜன்னல் வழியாக மெதுவாக உள்ளே கவனித்தான் பாங்கர். அவன் மனம் மட்டும் அவன் செய்கையை எதிர்ப்பது போல் நடந்து கொண்டது. அவன் நடுங்கினான்.

வக்கீலின் அறையில் மெழுகுவத்தி ஒன்றுதான் மங்கலாக எரிந்து கொண்டிருந்தது. அவன் மேஜைக்கருகில் அமர்ந்து தலையை மேஜையின் மீது வைத்திருந்த கரங்களின் மேல் தாங்கிக் கொண்டிருந்தான். அவனுடைய தலையில் இருந்த அடர்ந்த மயிரையும், முதுகை சக்தி யும், கரங்களில் வளர்ந்திருந்த ரோமங்களையும் பாங்கர் பார்க்க முடிந்தது. புத்தகங்கள் மேஜையின் மீது சிதறிக்கிடந்தன அறையில் மேஜையை ஒட்டினுல் போல் கீழே விரிப்பு ஒன்றும் அதன் மேல் இரு நாற்காலிகளும் இருந்தன.

ஐந்து நிமிஷங்கள் மெதுவாக நத்தை போல் ஊர்ந்து சென்றன. வக்கில் தன்னுடைய இருக்கையிலிருந்து சிறிதுகூட அசையவில்லை. பதினைந்து வருஷ ஏகாந்தம் அவனை ஜடமாக ஆக்கியிருந்தது. பாங்கர் தன் விரல்களின் நுனியினால் ஜன்னலின் கதவை மெதுவாகத் தட்டினான். அந்த ஒலியை அறையில் இருந்தவன் கேட்டிருக்க முடியும். ஆனால் உள்ளே இருந்தவன் அதற்குப்பதிலாக சிறிதுகூட அசையவில்லை. மெதுவாகக் கதவருகே சென்று பூட்டைப் பார்வையிட்டான். அதன் மீது வைக்கப்பட்டிருந்த முத்திரை சிறிதுகூட அலுங்காமல் இருந்தது. அதைப் பிரித்தான். பூட்டின் துவாரத்தில் மெதுவாகச் சாவியைச் செலுத்தினான். திருகின போது துருப்பிடித்திருந்த பூட்டு சிறிது சப்தித்துக்கொண்டே திறந்தது. கதவும் 'கிரீச்' சென்று ஒலித்தது.

இச்சத்தங்களைத் தொடர்ந்து ஆச்சர்யமிக்க கூக்குரலையும், அவசரமான காலடிகளையும் அவன் எதிர்பார்த்தான். ஆனால் அவன் நோக்கப்படி எதுவுமே நடக்கவில்லை. மூன்று நிமிஷங்கள் சென்றன. அவன் வந்த போது அங்கு எப்படி அமைதியாக இருந்ததோ, அதே நிசப்தம் தான் இப்போதும் நிலவிற்று. வக்கிலின் அறைக்குள்

பிரவேசிக்கத் தன்னுடைய மனதைத் திடப்படுத்திக் கொண்டான் பாங்கர்.

மேஜையின் முன்னிலையில் மனிதத் தன்மைகள் சிறிதளவும் பிரதிபலிக்காத மனிதன் ஒருவன் உட்கார்ந்திருந்தான். மிகவும் வற்றி உலர்ந்துபோன தோலால் கெட்டியாகக் கட்டப்பட்ட எலும்புக் கூட்டைப் போல் இருந்தான் அவன். பெண்களைப் போல் தலையில் நீண்ட கேசம் வளர்ந்திருந்தது. முகத்தில் அருவருக்கத் தக்கபடி நீண்ட தாடி தொங்கிக் கொண்டிருந்தது. அவன் விகாரமாகக் காணப்பட்டான். முகம் மட்டும் மஞ்சள் பூத்துக் கிடந்தது. ஒட்டிய கன்னமும்,முதுகு நீண்டு சுருக்கமாகவும், தலையை தாங்கிக் கொண்டிருந்த அவனுடைய புஜங்கள் மிகவும் மெலிந்து சூப்பிப் போய் ரோமங்கள் நிறைந்தும் பார்ப்பவர் மனதை கஷ்டப்படும்படி செய்தன. தலைமயிர் அங்கங்கே நரைவிழுந்திருந்தது. அவன் முகத்தைக் காண்பவர்கள் எவரும அவன் நாற்பது வயது ஆசாமி என்பதை நம்பமுடியாதபடி அது வயோதிகம் நிறைந்து விளங்கிற்று. மேஜையில் அவனுக்கு முன்னால் நல்ல காகிதம் ஒன்றில் ஏதோ தெளிவாக எழுதி வைக்கப்பட்டிருந்தது.

"தரித்திரம் பிடித்தவன்" என்று எண்ணினான் லேவாதேவிக்காரன். "நல்ல தூக்கம், லக்ஷ லக்ஷமாக அடைவதுபோல் கனவு காண்கிறான் போலும். பாதி உயிரை இழந்தவன் போல் தோன்றும் இவனை அப்படியே படுக்கையில் விட்டெறிந்தால் தீர்ந்தது. விஷயம்முடிந்துவிடும். தலையணையை சரியாக வைத்துவிட்டால், இவன் திடீரென்று இறந்ததாகசம்சயித்து சோதனை செய்ய விரும்புவர்கள் கூட இயற்கையாக மரித்ததாக எண்ணிவிடுவார்கள். எதற்கும் காகிதத்தில் என்ன எழுதியிருக்கிறான் என்று பார்ப்போம்!" என்று தன் மனதிற்குள் தீர்மானித்துக் கொண்டான்.

மெதுவாக மேஜை மீதிருந்த கடிதத்தைக் கையிலெடுத்தான் அதைப் படிக்க முற்பட்டான். வக்கீல் எழுதியிருந்தான் அதை.

"நாளை நள்ளிரவு பன்னிரெண்டு மணிக்கு எனக்குச் சுதந்திரம் கிடைத்துவிடும். நான் மக்களுக்கு மத்தியில் பழக ஆரம்பித்துவிடுவேன். ஆனால் இந்த அறையை விட்டு நீங்கி, நான் சூரியனுடைய ஒளியைப் பார்க்கும் முன்பு உங்களிடம் சில வார்த்தைகள் கூற வேண்டியது அவசியம் என நினைக்கிறேன். என்னுடைய சுயமான அறிவிலும், நினைவிலும், என்மேல் எப்போதும் தன் திருஷ்டியைச் செலுத்திக் கொண்டிருக்கும் ஆண்டவன் முன்னிலையிலும் நான் அறிவிப்பது யாதெனில், நீங்கள் அளித்த புத்தகங்கள், 'உலகத்தின் வரப்பிசாதங்கள்' என்று கோஷமிடும் வாழ்க்கை, ஆரோக்கியம், சுதந்திரம் இன்னும் எவ்வளவு உண்டோ அவ்வளவையும் நான் துறக்கிறேன்.

"சென்ற பதினைந்து வருஷங்களாக நான் பூவுலகத்தைப் பற்றி பூரணமாகப் படித்துணர்ந்தேன். உண்மையாகச் சொல்லப்போனால் நான் உலகத்தையோ, அதில் வாழும் மக்களையோ கண்களால் பார்க்கவில்லை. ஆனால் புத்தகங்களில் மூலம் சுவைமிக்கமதுவைப்பருகினேன். இனிய கீதங்களைப் பாடி மகிழ்ந்தேன். அழகிய மான்களையும்,

பயங்கரமான துஷ்டக் கரடிகளை யும் ஓடித் துரத்தி வேட்டை யாடி மனம் பூரித்தேன். கன்னி யர்களை நேசித்தேன்......ஆம்! எங்கள் கவிகளின் கற்பனை மந்தி ரத்தில், வானத்தில் தோன்றும் மேகங்களைப்போல்அப்பப்போது தோன்றின. அழகு மிக்க அவ் வளவு இளம் மங்கைகளும் இரவு நேரங்களில் என்னை நாடி வந் தார்கள். அழகான கதைகளை அப்பருவ மங்கையர் என் காது களில் ரகஸ்யமாகக் கூறி என் மூளையை கிறுகிறுக்கச் செய் தார்கள். உங்கள் புத்தகங்களை கொண்டு எல்புரூஸ் மலை உச்சி யிலும், பிளாங்க் மலைச் சிகரத்தி லும் நான் சஞ்சரிக்கமுடிந்தது. அங்கிருந்து காலைக் கதிரவனின் உதயத்தையும், மாலையில் செக்கச் சிவந்து காணும் செவ் வானத்தை கண்டு மனம் பேத லிக்க முடிந்தது. அந்த ஜோதி யில்சமுத்திரத்தின் ஆகாயநிறத் தண்ணீர் தங்கக் குழம்பானதை யும், பார்த்து ரசித்தேன். தலைக்குமேல் தவழும் மேகங்களை கிழித்துக் கொண்டு மின்னல் பளிச்சிட்டுகண்ணைப் பறித்தது. பசுமை நிறைந்த கானகங்கள், பச்சைக்கம்பளம் விரித்தாற் போல் தோன்றும் வயல் வெளி கள், ஆறுகள், ஏரிகள், அழ கான நகரங்கள்யாவையும் கண்டு இன்புற்றேன். ஸைரன் போன்ற தேவதைகளின் மனதைப் பர வசப்படுத்தும் கீதங்கள், பரன் தேவதையின் இனிமை நிறைந்த குழலோசை இவைகள் உள்ளத் தை பேரானந்தம் அடையும்படி செய்தன. கடவுளைப் பற்றி துஷ் பிரசாரம் செய்ய வந்த சைத் தான்களின் அழகிய சிறகுகளை ஸ்பரிசித்து மகிழ்ந்தேன்...உங் கள் புத்தகங்கள் ஆழம்காண முடியாத சமுத்திரத்தில் மூழ்கி எழ எனக்கு உதவின. பல அற்புதங்களைப்புரிந்தேன். நான் புது மதங்களைப் போதனை செய் தேன்... தேசங்கள் எல்லாவற் றையும் வென்று அடிமை கொண்டேன்...

" உங்கள் புத்தகங்கள் மூலம் என் அறிவும், விவேகமும் பெருகிறது. சளைக்காமல், களைக்கா மல் பல நூற்றுண்டுகளில் உற் பத்தி செய்விக்கப்பட்ட சிறந்த சிந்தனைகளையும், எண்ணப் போராட்டங்களையும் உருட்டிப் பிசைந்து சிறுபந்துபோலாக்கி முண்டையோட்டிற்குள் அடக்கம் செய்துகொண்டு விட்டேன். உலகில் எல்லோரையும் விட நானே அறிவாளி என்பதையும் தெள்ளத்தெளிய அறிகிறேன்...

" உங்கள் புத்தகங்கள் எல் லாவற்றையும் நான் திரஸ்கரிக் கிறேன். உலக ஆசைகளையும், பாசங்களையும் நான் உதறித் தள்ளுகிறேன். அவைகள் யாவும் சூன்யமானவை. சக்தியற் றவை. அவைகள் எல்லாம் வெ றும் தோற்றமே தவிர நிலைத்து நிற்கக் கூடியவை அல்ல, எல்லாம் மாயை. நீங்கள் யாவ ரும் அறிவாளிகள், அழகர்கள், கண்யமிக்கவர்கள் ஆனால் சாவு உங்களை விட்டுவைக்கவில்லை. பூமியின் கீழ் வாழும் குழி எலி யைப் போலவே மரணம். உங் களையும் பூமியிலிருந்து துடைத் தெறிந்து விடுகிறது. உங்கள் பரம்பரையின் மகத்துவம், உங்க ளுடைய சுயசரித்திரங்கள், சிரஞ் சீவித்வம் பெரும் உங்களுடைய புகழுக்குப் பாத்திரமான மேதா விகள், எல்லாம் உலோகத்தில் ஏற்படும் சேதாரத்தைப் போல் மடிந்துபோகக் கூடியது. உல கத்தோடு அவைகளும் எரிந்து போகக் கூடியவைகள்.

"நீங்கள் எல்லோரும் கலப்பற்ற முட்டாள்கள் என்பதில் சந்தேகம் சிறிதும் கிடையாது. தவருன வழியை நேர்மையான பாதை என்று நினைத்து அதை பின் பற்றியிருக்கிறீர்கள். தப்பை சரியென்றும், கோரத்தை அழகென்றும் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். ஆப்பில் ஆரஞ்சு மரங்களில் பழங்கள் காய்ப்பதற்கு பதிலாக தவளைகளும், அரணைகளும் காய்த்துத் தொங்கினல் நீங்கள் நிச்சயம் திகைத்து அஞ்சுவீர்கள். வெகு தூரம் ஒடி அயர்த்து களைத்துப் போன குதிரை பெருமூச்சு விடுவதைப் போல், உங்கள் தோட்டத்தில் புஷ்பிக்கும் அழகிய ரோஜா மலர்கள் துர்கந்தம் வீசினல் நீங்கள் மருள்வீர்கள். உங்களைப் போலவே நீங்கள் அத்தகைய செயல்களைக் கண்டு பிரமிப்பது போலவே—நான் உங்களைக்கண்டு ஸ்தம்பிக்கிறேன். சாதாரண பூமியை விரும்பி இனிமை நிறைந்த சுவர்க்கத்தை நீங்கள் விலைபேசுகிறீர்கள். உங்களை நான் புரிந்து கொள்ள விரும்பவில்லை...

"நீங்கள் எதைப்பெற விரும்புகிறீர்களோ, அது இல்லாமலேயே நான்வாழ முடியும் என்பதை என் செய்கைகள் மூலம் நிரூபிக்க முடியும். ஒரு காலத்தில் நான் இந்திர போகம், சொர்க்க போகம் என்றெல்லாம் கனவு கண்ட அறுபது லக்ஷம் தங்கக் கட்டிகளை இப்போது வெறுத்து ஒதுக்குகிறேன். எனக்கு அவைகளின் மேல் உள்ள பாத்யதையிலிருந்து விடுபட்டுப் போகப் போகிறேன். ஒப்பந்தத்தில் வறையறுக்கப்பட்ட காலத்திற்கு ஐந்து நிமிஷங்களுக்கு முன்பு இந்த அறையிலிருந்து வெளியேறி அதனுடைய நிபந்தனைகளை மீறப்போகிறேன்..."

கடிதத்தை பல்வேறு உணர்ச்சிகளுடன் படித்து முடித்தான் பாங்கர். உலகத்தில் இருந்த எல்லோருக்கும் அதை வக்கீல் எழுதியிருந்தது போல் தோன்றிற்று அவனுக்கு. அதை மேஜையின் மீது வைத்துவிட்டு அந்த விசித்திரப்பிறவியின் தலையை முத்தித்தான் அவன். அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. கண்களில் கண்ணீர் வெள்ளமாகப் பெருக அறையை விட்டு வராந்தா வழியாக தோட்டத்திற்கு வந்தான் அவன். இதற்கு முன்பு எந்த நெருக்கடியான சமயங்களிலும்—பண்டமாற்று சூதாட்டத்தில் கடுமையான நஷ்டம் வந்தபோதும் கூட—அவன் இத்தகைய மனக்கிலேசம் அடைந்ததில்லை. வீட்டை அடைந்து படுக்கையில் படுத்தான். மனக்கிளர்ச்சியும், கண்களில் வழிந்த கண்ணீரும் வெகு நேரம் வரையில் அவன் தூக்கத்திற்கு இடஞ்சல் விளைவித்தன.

மறு தினம் காலையில் 'வாச்மேன்' அவசரமாக ஓடிவந்தான். தோட்டத்தில் வராந்தா அறையில் வசித்துவந்த ஆசாமி தன் அறையின் ஜன்னல் வழியாக தோட்டத்தில் குதித்து வாயிற் கதவு வழியாக வெளியே ஓடி மறைந்ததாகச் சொன்னன் அவன்.

பாங்கர் உடனடியாகத் தன் வேலையாட்களுடன் தோட்டத்தில் இருந்த அறைக்குப் போனன். வக்கீல் ஒப்பந்தத்தை மீறி ஓடிப்போனதை ஸ்தாபித்தான். அநாவஸ்யமான வதந்திகளைத் தவிர்க்க வக்கிலின் மேஜை மீதிருந்த காகிதத்தை கையில் எடுத்துக் கொண்டு வீட்டிற்கு வந்தவுடன தன் பெட்டகத்தில் அதை வைத்துவிட்டு, இழுத்துப் பூட்டினன். ★

*கண்ணைக் கவரும் வண்ணம் கடைகளிலே வரிசை வரிசையாக வைக்கப்பட்டிருக்கும் சோடா முதலிய பான வகைகளைக் கண்டுெடுத்தும் பார்க்காதிருந்தால் வியாதிக் கிரையாகாதிருக்கலாம். உண்மையை அறிய இந்தக் கட்டுரையைப் படித்துப் பாருங்கள்.*

# பானங்கள்

★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★

'லக்ஷ்மி'

உற்சாகத்தை ஊட்டவும் ஜீரண சக்தியை அதிகப்படுத்தவும் நாம் உட்கொள்ளும் திரவ பதார்த்தங்களை பானங்கள் என்று அழைக்கின்றார்கள். பல்வேறு பான வகைகளுக்கும் அடிப்படியான முக்கிய வஸ்து தண்ணீர். தண்ணீர் மனிதனின் இன்றியமையாத பானம் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். பான வகைகள் எண்ணிக்கையற்றவைகள். அவைகளில் நாம் அதிகம் உபயோகிக்கும் சில பானங்களை மட்டும் கீழே விவரிக்கப்பட்டிருக்கின்றது.

சோடா:- சோடா, கலர் முதலிய பான வகைகள் வெற்றிலைப் பாக்குக் கடைகளின் முக்கிய அலங்காரம், பச்சை, சிவப்பு, கறுப்பு, மஞ்சள் முதலிய கண்களைக் கவரும் நிறத்தில் புட்டியில் அடைக்கப்பட்டிருக்கும் இந்த பானங்களை வெயிற் காலங்களில் வாங்கிக் குடித்து தாகம் தீர்த்துக் கொள்வது நம்மில் அநேகருக்கு மிக்க வழக்கமாகி விட்டது. சோடா முதலிய பான வகைகளின் அடிப்படியான பொருள் தண்ணீர். தண்ணீரில் வாசனையும், நிறமும், தித்திப்பும் கொடுக்கக் கூடிய சில திரவப் பொருள்களைக் கலந்து கரியமில வாயுவையும் சேர்த்து கண்ணாடிப் புட்டிகளில் அடைத்து வைக்கின்றார்கள்.

கரியமில வாயு நீரில் கலந்திருப்பதனால்தான் சோடா முதலிய பானங்களுக்கு தித்திப்புடன் சுரீர் என நாவைத் தாக்கும் ஓர் குணமும் சேர்ந்திருக்கின்றது. கரியமில வாயுவுக்கு ஜீரண ரசங்களை அதிகப்படுத்தும் தன்மையும், ஜீரண சக்தியை துரிதப்படுத்தும் குணமும் உண்டு. இதனால் தான் வயிற்றுக் குமட்டல் போன்ற உபத்திரவங்களுக்கு சோடாவை வாங்கிச் சிலர் சாப்பிடுகின்றனர். சோடாவைப் பாலுடன் கலந்தால் பால் திரிந்து விடும். மது பான வகைகளில் ஒன்றான ஒயின் என்னும் திராக்ஷை ரசத்துடன் சோடாவைக் கலந்து பருகும் மர்மம் என்னவென்றால் திராக்ஷை ரசத்தில் அதிக அமிலம் இருக்கின்றது. இந்த அமிலம் நாக்கை உணர்ச்சியற்றதாக்குவதுடன், உமிழ்நீர் சுரப்பதையும் மிக்க பாதித்து விடுகின்றது. சோடாவில் உள்ள கரியமிலவாயு திராக்ஷை ரசத்தின் அமில சக்தியை மழுங்கச் செய்து விடுமாதலினால், திராக்ஷை ரசத்துடன் சோடாவை விட்டுப்பருகுகின்றார்கள்.

சோடா, கலர் முதலிய பானங்கள் செய்ய உபயோகிக்கும் நீரின் ஆரோக்கியத் தன்மை மிகவும் சந்தேகத்திற்குரியது. சுகாதார மேற்பார்வையின் பயம் இல்லாத தயாரிப்புச் சாலைகளில் கிடைத்த தண்ணீரில்சோடாமுதலிய பானங்களைத் தயாரித்து விடுகின்றனர். இதனால் வியாதிகள் சோடா மூலம் பலருக்கு பரவ உதவுகின்றது. மேலும்

வியாதிக் கிருமிகள் கரியமில வாயுவில்நன்ருக விருத்தியடையக் கூடும். ஆகவே கலர், சோடா இவைகளைச் சாப்பிடுவதைப் பற்றி ஜனங்கள் யோசிக்க வேண்டியது அவசியம்.

காப்பி, தேநீர், கொக்கோ முதலிய பான வகைகளை நாம் சாதாரணமாகத் தினம் உபயோகிக்கின்ருேம். காபி அல்லது தேநீர் இந்த இரு பானங்களுக்கும் அடிமையாகாத நாகரிக மனிதர்கள் இல்லையென்று திண்ணமாகக் கூறலாம்.

தேயிலை என்னும் இலை காமிளயாதியா என்னும் ஓர் வகைச் செடியின் இலை. இந்தச் செடி சைஞ, ஜப்பான், இந்தியாவில் டார்ஜீலிங், அஸ்ஸாம், சிலோன் முதலிய இடங்களில் ஏராளமாகப் பயிராகின்றது.

செடியின் நுனியில், துளிர்த்து வளரும் இளம் கொழுந்து இலையில் அதிகம் நார் இல்லாமல் மிக்க ரசம் உடையதாயிருக்கும். இந்தக் கொழுந்துஇலையை 'ஆரஞ்சுபிக்கோ' என்று அழைக்கின்ருர்கள். இதுதான் மிக்க உயர்ந்த ரகமான தேயிலை என்று கருதுகின்ருர்கள். நுனிக் கொழுந்திற்கு அடுத்தபடியாக உள்ள இளந்தளிர் இலைகள் சற்று பெரிதாக இருக்கின்றன. அவைகளுக்கு 'பிக்கோ' என்று பெயர். அதற்கு அடுத்தபடியாக கிழே உள்ள இலைகளுக்கு 'சௌச்சான்ஸ்' எனப்பெயர்.

மேற்சொன்ன வகைகளில் பிரிக்கப்பட்ட தேயிலையைச் சேகரித்துப் பதப்படுத்தி உபயோகிக்கின்றனர். தேயிலைத் தூளில் காபின் என்னும் பொருள் 1-லிருந்து 4 1-ம் தியோ பிலின் கொஞ்சமும், மணத்தைக் கொடுக்கும் எண்ணெய்ப் பொருள் 01–1-க்கும் இருக்கின்றன. இந்த எண்ணெய்ப் பொருள் ஆவியாகி வெளியேறுவதினல்தான் தேநீரில் இனிமையானதொரு மணம் வீசுகின்றது. இவைகளை எல்லாம் தவிர தேயிலேயில் டானிக் ஆசிட் என்னும் பொருள் அபரிமிதமாக இருக்கின்றது. இந்தியத் தேயிலேயில் ஸ்சைஞ தேசத்துத் தேயிலேயை விட டானிக் ஆசிட் அதிகம் இருக்கின்றது எனக் கணக்கிட்டிருக்கின்ருர்கள்.

தேயிலேயில் கொதிக்கும் நீரை விட்ட சில நிமிஷ நேரங்களில் தேயிலையின் எடையில் நான்கில் ஒரு பாகம் நீருடன் கரைந்து கலந்து விடுகின்றது. தேயிலைமீது நீர் பட்ட உடனேயே காபின் என்னும் பொருள் தேயிலேயினின்றும் பிரிந்து நீரில் கலந்து விடுகின்றது. ஆனல் டானிக் ஆசிட் என்னும் பொருள் தேயிலை நீரில் சில நிமிஷம் ஊறும்படி வைத்திருந்தால்தான் நீருடன் கலக்கின்றது என்று கண்டு பிடித்திருக்கின்ருர்கள்.

காப்பி என்னும் பானத்திற்கு உபயோகிக்கும் விதை, காபியா அரேபிகா என்னும் செடியினின்று உண்டாகின்றது. இந்தச் செடியின் பழங்களிலிருந்து சேகரித்த காப்பி விதையை நாம் வறுத்துப் பொடியாக்கி உபயோகிக்கின்ருேம். வறுத்த காப்பிக் கொட்டையில் காபின் என்னும் பொருள் 2–1-ம் கேபியால் என்னும் எண்ணெய்ப் பொருள் கொஞ்சமும், அபரிமிதமாக டானிக் ஆசிடும் இருக்கின்றன.

கேபியால் என்ற எண்ணெய்ப் பொருள் காப்பிக் கொட்டைகளை வறுக்கும் பொழுது அவைகளின் மீதிருந்து கசிந்து வெளிப்படும். இதுதான் காப்பிக்கு ஓர் விதமான சுகந்த மணத்தைக் கொடுக்கின்றது. காப்பிக் கொட்டைகளிலிருக்கும் டானிக் ஆசிட், தேயிலைத் தூளிலிருக்கும்டானிக்ஆசிடைப்போன்றுகுடலை அதிகமாக மந்தப்படுத்துவதில்லை. ஆகவே தேநீரைவிட காப்பியே (ஜீரணத்தைப் பொருத்த வரை) மிகவும் நல்ல பானம் என்று கூறலாம். கேபியால் என்ற எண்ணெய்ப் பொருள் காப்பிக் கொட்டையை வறுத்து வெகு நாட்கள் டப்பாக்களில் அடைத்து வைத்திருந்தால் மறைந்து விடும். அதனல் காப்பிக் கொட்டையை அப்போதைகப்போது வறுத்துப் பொடி செய்து உபயோகித்தால்தான் நல்ல மணமுள்ள காப்பி தயார் செய்ய முடியும். ஐந்து பலம் காப்பிப்

பொடியில் கொதிக்கும் நீரை வார்த்தால் அதில் ஒரு பலம் தண்ணீருடன் கரைந்து விடுகின்றது. காப்பிப் பொடியுடன், சிக்கரிப்பொடியும் கருக்கிய சர்க்கரையும் சேர்ந்த தூள் பிரஞ்சு காப்பி என்ற பெயரில் கடைகளில் விற்கப்படுகின்றது.

காப்பி தயாரிக்கும் விதங்கள் பல நாடுகளிலும் பல தினுசாகக் கையாளப் படுகின்றன. வடிகட்டிகள் அல்லது 'பில்டர்' என்ற பித்தளை அல்லது வெண்கலம், அல்லது பீங்கான் இவைகளால் ஆன பாத்திரங்களை சாதாரணமாக நமது நாட்டில் அநேக வீடுகளில் உபயோகிக்கின்றனர். அடியில் துவாரங்கள் அதிகம் உள்ள பாத்திரத்தில் குறித்த அளவு காப்பிப் பொடியைப்போட்டுஅதைத் தாங்கிக் கொள்ளும் பாத்திரத்தின் மீது வைத்துக் கொதிக்கும் நீரை வார்த்து மூடியால் நன்றாக மூடிவிடுகிறார்கள். பாத்திரத்தை மூடாவிடில் வெளி மண்டலத்தில் வியாபித்திருக்கும் பிராண வாயுவினால் கேபியால் என்ற எண்ணெய்ப்பொருள் கெட்டுவிடும். அதனால் காப்பியின் சுகந்த மணம் பாதிக்கப்படும். இப்படி வடிகட்டுவதினால் காப்பிப்பொடியின் எடையில் 15 பங்குதான் நீருடன் கரைகின்றது.

காப்பியின் வாசனை கெடாமல் மெல்லியதாக காப்பியை தயாரிக்க உபயோகிக்கும் ஓர் முறைக்கு 'இன்ப்யூஷன்' எனப் பெயர். நல்ல சுத்தமான துணியில் காப்பிப் பொடியைப் போட்டு சரசரவென்று கொதிக்கும் நீரைவிட்டு, இறக்குவதற்குத்தான் இப் பெயர்.

துருக்கி தேசத்தில் காப்பிக் கொட்டையை வறுத்துப் பொடியாக்கி, பச்சை ஜலத்துடன் கலந்து கொதிக்க வைத்து, பின்பு அதில் பாலையும், சர்க்கரையையும் கலந்து சாப்பிடும் ஓர் முறை அனுசரிக்கப் படுகின்றது.

கொக்கோ என்பது தியோப்ரோமா கொக்கோ என்னும் செடியின் பழத்தின் விதையினின்று செய்யப்படும் தூள். சாக்கலெட் என்னும் இனிய பண்டமும் இந்த விதைகளிலிருந்துதான் செய்யப்படுகின்றது.

காப்பி, தேநீர் முதலிய பானங்கள் உடலுக்கு வேண்டிய சத்துப் பொருள்கள் அல்ல. இவைகளுடன் பாலும் சர்க்கரையும் சேர்த்து நாம் சாப்பிடுவதினால் தான் இவைகள் ஓரளவு ஆகாரம் என்ற ஸ்தானத்தை அடைய முடிகின்றன.

மணம் கமழும் ஒரு கோப்பை தேநீரை அருந்தினால் ஒருவித சுறுசுறுப்பு உடம்பில் ஏற்படுகிறது என்பது என்னவோ உண்மைதான். ஆனால் அதிக நேரம் ஊறிய தேயிலையிலிருந்து தயாரித்த தேநீரை உட்கொண்டால் மலச்சிக்கல், வயிற்றுக் குமட்டல் முதலியவைகள் ஏற்படும். இதைத்தவிர தேநீருக்கு குடலில் வாயுவை உற்பத்தி செய்யும் குணமும் உண்டு. ஜீரணக் கோளாறுகளால் அவதிப்படுகிறவர்கள், பலஹீன தேகநிலை உடையவர்கள், நித்திரை வராது தவிக்கும் இயல்புடையவர் இவர்கள் தேநீரைச் சாப்பிடாதிருப்பது நலம். சிலருக்குத் தேநீர் சாப்பிட்டவுடன் ஹிருதயம் படபட வெனத்துடித்து மிக்க மன அயர்ச்சியைக் கொடுப்பதும் உண்டு.

காப்பி, களைத்த மூளையைத் தூண்டி உற்சாகப்படுத்தி உடம்பின் சோர்வையும், மனக் கலக்கத்தையும் போக்குவதைப் போன்ற ஒரு பிரமையை உண்டாக்கும் பானம். இதனுடைய மேற்சொன்ன குணங்களின்பொருட்டுதான் பரீட்சைக்குப் படிக்கும் மாணவர்கள் தமது மேஜை மீது கூஜா நிறைய இப்பானத்தை தயார் செய்து வைத்துக் கொள்கிறார்கள்! ஆனால் குடித்த காப்பியின் அளவிற்கும் பரீட்சையில் வாங்கும் மார்க்குகளின் அளவிற்கும் ஒரு விதமான தொடர்பும் கிடையாது என்பதை எச்சரிக்கை செய்து விடுவோம்!

காப்பியிலிருக்கும் காபீன் என்னும் பொருளுக்குப் பசியை சாந்தப்படுத்தும் குணம் உண்டு. ஆனால் காப்பியை மட்டும் ஆகாரமாக உட்கொண்டு ஒரு மனிதன் ஜீவித்திருக்க முடியாது என்பதையும் ஆராய்ச்சி

பாளர்கள் கண்டு பிடித்திருக்கிறார்கள். ஜெர்மனியில் சிப்பாய்களிடையே ஒரு பரிசோதனை செய்யப்பட்டது. சிப்பாய்களுக்கு நல்ல ஆகாரம் அளித்த பின்பு அத்துடன் ஒரு கோப்பை காப்பி, அல்லது தேநீர் இந்த இரு பானங்களும் வழங்கப்பட்டது. அவர்களால் பல மைல்கள் களைப்புத் தெரியாமல் நடக்க முடிந்ததாம். வெறும் ஆகாரம் மட்டும் சாப்பிட்டு விட்டு, உற்சாகம் கொடுக்கக்கூடிய காப்பி, தேநீர்ப் பானங்களை அருந்தாமல் நடந்த சிப்பாய்கள் குறைந்த மைல்கள் தூரந்தான் நடக்க முடிந்ததாம். ஆனால் வெறும் காப்பியையோ, அல்லது தேநீரையோ மட்டும் சாப்பிட்டுக் கொண்டு ஆகாரமே இல்லாமலிருந்தால், தேகச் சோர்வு காப்பி, தேநீர்க் குடியர்களிடம் சீக்கிரத்தில் ஏற்பட்டு விடுகிறதாம்.

சாப்பிட்ட உடனே காப்பியை அருந்தினால் ஜீரணம் பாதிக்கப்படுகின்றது. அதிகம் காப்பி சாப்பிட்டால் நரம்புத் தளர்ச்சி, இருதயப் படபடப்பு, தூக்கமின்மை இவைகள் ஏற்படுகின்றன.

கொக்கோ என்னும் பானத்தை நம் நாட்டில் அதிகம் உபயோகிப்பதில்லை. சிலருக்கு இப்பானத்தின் வாசனை பிடிப்பதில்லை. ஆனால் சத்துப் பொருள் விஷயத்தில் காப்பி தேநீர் இவைகளைவிட கொக்கோ மிகவும் உயர்ந்தது. 10 கிராம் கொக்கோ தூளில் செய்த பானம் 150 காலரி சக்தியைத் தருகின்றது எனக் கணக்கிட்டிருக்கின்றார்கள். சாக்கலெட் என்னும் இனிய பண்டம் கொக்கோவை விட உயர்ந்தது. அரை ஆழாக்குப் பாலும், இரண்டு அவுன்ஸ் சாக்கலெட்டும் 400 காலரி சக்தியைத் தருகின்றதாம்.

**ஓவல்டின்:—** வியாதியஸ்தர்கள், கர்ப்பிணிகள், குழந்தைகள், முதியவர்கள் மட்டும் அதிகமாக உபயோகிக்கும் பானம். சர்க்கரை, பால், முட்டை, கோக்கோ தூள் முதலியவைகளைக் குறித்த அளவில் சேர்த்துத் தயாரிக்கப் பட்ட மிக்க சத்துள்ள ஆகாரம். ஒரு அவுன்ஸ் ஓவல்டின் 120 காலரி சக்தியைத் தரும் வல்லமையுள்ளது. இப்பானம் தேகத்திற்கு வேண்டிய சத்துப் பொருள்களைக் கொண்டிருப்பதனால் ஆரோக்கியத்திற்கு மிகவும் ஏற்றது. காப்பி, தேநீர் இவைகளில் உள்ள கெடுதல்கள் இப்பானத்தில் கிடையாது. தூக்கமின்றித் தவிப்பவர்கள்சுடச்சுட ஒரு கோப்பை இப்பானத்தைப்பருகினால் தூக்கம் வரும் என வைத்தியர்கள் மிக்க சிபாரிசு செய்கிறார்கள்.

**ஷர்பத்துகள் :—** இந்தியாவில் அதிகமாக உபயோகப் படுத்தும் பானங்களில் ஷர்பத்துகள் மிகவும் முக்கியமானவை. வெயிற் காலத்தில் குளிர்ச்சியாகவும் இனிமையாகவும் உள்ள பானங்களில் ஷர்பத்துகளுக்கு ஈடு வேறில்லை எனச் சொல்லலாம். நன்னாரி முதலிய மூலிகைப் பொருள்களிலிருந்து இறக்கிய சத்து நீருடன் சர்க்கரையும், பல நிறங்களையும் சேர்த்துக் கடைகளில் விற்கின்றார்கள். இந்த ஷர்பத்துகளை வாங்கித் தேவையான பொழுது குறித்த அளவு நீருடன் கலந்து சாப்பிடலாம். வீடுகளில் சாதாரணமாக தயாரிக்கும் ஷர்பத்து எலுமிச்ச ரசத்தினால் செய்யப்படுகின்றது. தண்ணீரில் எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து சர்க்கரை போட்டுத் தயாரிக்கும் ஷர்பத் மற்ற எல்லா ஷர்பத்துகளை விடவும் உயர்ந்தது. ஏனெனில் எலுமிச்சை ரசத்தில் உள்ள வைடமின் வேறு எந்த ஷர்பத்திலும் கிடையாது. வைடமின் 'சி, உடலுக்கு மிக்க தேவையான பொருள் எனச் சொல்லத் தேவையில்லை.

தென்னிந்தியாவில் அடிபடும் மிக்க மலிவான பானம் இளநீர். இதில் 92·1. புரதம், 62·1. மாவுப் பொருள், சில உப்புக்கள் இவைகள் கலந்திருக்கின்றது. வயிற்று நோவு உடையவர்களுக்கு தகுந்த பானம் இளநீர். பிரயாணம் செய்யும் வழியில் குடிக்க நல்ல தண்ணீர் கிடைக்காவிடில் காப்பி, தேநீர் இவைகளைச் சாப்பிடுவதைவிட இளநீரை வாங்கி அருந்துவது நலம். ★

# ஏழு நாட்கள்

டி. எம். பொற்றைக்காட்

இடுப்பளவுக்கு மேல் சேறு நிறைந்த அந்த வாய்க்காலில் இறங்கி நின்று அழுகிய தேங்காய் மட்டைகளைச் சவுரி பிரித்து எடுப்பதும் உரத்த குரலில் பேசுவதுமாயிருக்கும் அந்தச் சுறுசுறுப்புள்ள வாலிபனைக் கரையிலிருந்து சவுரி அடிக்கும் நங்கை கல்யாணி ஆச்சரியமும் ஆவேசமும் கலந்த பார்வையோடு தன்னை மறந்து நோக்கி நின்றாள். அவளுடன் சவுரி அடிக்கும் மற்ற முந்நூறு பெண்களும் இவளைப் பார்த்து ஒருவருக்கொருவர் கண் ஜாடை மூலம் பேசினார்கள். ஆனால், அந்த யுவதி இவற்றை ஒன்றும் கவனித்ததாகத் தெரியவில்லை. உற்சாகமாகத் திருவிழாப் பார்ப்பது போல, அவள் அவனுடைய அந்த வீரமிக்க புரட்சிச் சொற்பொழிவில் மூழ்கியிருந்தாள்.

"நீங்கள் நாய்கள் தானடா, நாய்கள்!" அவன் தன்னுடைய சக தோழர்களை உணர்ச்சி மீறிய ஆவேசக் குரலில் சீறி விழுந்தான். தேங்காய் மட்டைகளை அள்ளிக் குவிப்பவர்கள், சவுரி அடிப்பவர்கள், கயிறு முறுக்குபவர்கள் ஆகிய ஆயிரத்திற்கு மேற்பட்ட ஆண் பெண் தொழிலாளர்களும் ஒரு வார்த்தை எதிர்த்துப் பேசாமல் மௌனமாக அதை ஏற்றுக் கொள்கிறார்கள். அவர்களில் ஒருவருக்கும் அதற்கு பதில் சொல்ல வாயில்லை. தாங்கள் குற்றவாளிகள் தானென்ற எண்ணம் அவர்கள் மனதில் பதிந்திருந்தது.

ஆயிரத்திற்கு மேற்பட்ட தொழிலாளிகளும் அறிந்தோ அறியாமலோ அவன் முன்பு தலை வணங்குவதைக் கண்டு சமீப காலத்தில்தான் அங்கு வேலையிலமர்ந்த அந்தப் பெண்மணி அசைவற்று உட்கார்ந்துவிட்டாள். அடக்கு முறையின் நிலைக்களனை அந்த இடத்திலிருந்து அவன் உரத்துக் கத்துவது, அடுத்த வினாடியிலேயே ஆயிரம் போலீஸ் லாரிகளை வரவழைக்கக் கூடிய காரியமாகும்.

கடந்த ஆறு ஏழு மாத காலமாக அவ்விடத்தில் ஒருவருமே இம்மாதிரிப் பேசியதில்லை. காரணம் நாவசைத்தால் போதும், தடியடியும் கைது செய்வதும் உடனே ஆரம்பமாகும். நாள் தவறாமல் பொதுக் கூட்டங்களும் ஊர்வலங்களும் நடந்து வந்த அங்கு அதெல்லாம் இன்று சட்ட விரோதமாகும். மாதக் கணக்கில் கூலி கொடுக்கப்படாவிட்டாலும் கூட்டங்கூட்டமாக வேலையிலிருந்து வெளியேற்றினாலும் ஒரு துரும்பை, அசைக்கவும் இதுவரை யாரும் முயன்றதில்லை.

இந்த உணர்ச்சிகரமான மலையாளக் கதையைத் தமிழில் தருபவர் **ஸ்ரீ கோடங்கல் கிருஷ்ணசாமி.**



ROJA MUTHIAH
47, HOSPITAL STREET
KOTTAIYUR-623 106

பன்னிரண்டு மணி நேரம் வேலை செய்யும் அவர்களுக்குக் குடிப்பதற்கான நல்ல தண்ணீராவது எடுத்து வைக்க வேண்டுமென்று ஒரு மனிதன் மனுக் கொடுத்ததற்குப் பலனாக ஒரு மாத காலம் அங்கு தினமும் இருபது லாரி "சட்டமும் ஒழுங்கும்" இறக்குமதி செய்யப் பட்டது!

"அது தானடா சொல்கிறேன். நீங்களெல்லாம் நாய்களென்று; நாய்கள்!" தீப்பொறி பறக்கும் கண்களும் துடிக்கின்ற உதடுகளோடும் அவன் மூச்சு விடாமல் பேசிக் கொண்டிருக்கிறான்; "நாம் எதையும் மறந்து விடலாம். ஆனால், அந்த நம்முடைய கொடியை அந்தப் பயல்கள்" கையில் விட்டு விட்டீர்களே!

ரத்தத்தின் நிறம் வாய்ந்து பட்டொளி வீசுகின்ற அந்தச் செங்கொடியைப் பற்றிச் சொல்லும் போது தான் இளம் கல்யாணிக்கு தெளிவாக விளங்கியது.

"ஆம்! கொடிக்காரகோபால்... .........அண்ணன்!"

ஆம், "கொடிக்கார கோபாலன்!"

அப்படிச் சொன்னால் தான் ஜனங்களுக்கு அவனைத் தெரியும்! அந்தக் கொடியைப் பிடித்து இந் நாட்டில் ஒரு சரித்திரம் உற்பத்தி செய்தவன் அவன் தான். ஒருசமயம் அறுபது போலீஸ் கூடி அவனை வெறி நாய்களைப் போல் சூழ்ந்து தாக்கினார்கள்; அவனுடைய கையிலிருந்து அக் கொடியைப் பறிக்க அவனுடைய தலையிலும் சரீரமுழுவதும் காயங்களேற்பட்டும் காலொடிந்து கையோடிந்து சரீர மெல்லாம் ரத்த வெள்ளம் பெருக்கெடுத்தும் அவன் உணர்விழந்து போயும் அவனுடைய கொடிபிடித்த கை தளரவில்லை. கடைசியில் போலீசுக்குக் கிடைத்தது செங்கொடியல்ல, சிறிது சிவப்பு நூல் இழைகள் மட்டுமே!

அதை நினைத்தபோது இளம் கல்யாணி திடுக்கிட்டுப்பெருமூச் செறிந்தாள்.

அவன் சிறிதும் தளராது மேலும் மேலும் பேசிக் கொண்டே யிருப்பதைப் பார்த்து உள்ளம் நெகிழ்ந்த ஒரு மூதாட்டி, அனுதாபமும், சிறிது பீதியும் கலந்த குரலில் பலமாகக் கூவினாள்: "வெளியில் வந்தவுடனேயே ஆரம்பித்து விட்டானல்லவா அவனுடைய ஜிந்தாபாத் முழக்கத்தை!"

உடனே கடந்த வேலை நிறுத்தத்தின் போது கருங்காலியாக முயன்ற மீனாக்ஷி கண்ணைச் சிமிட்டி, "நீங்கள் சிறிதுநேரம் பேசாமலிருங்கள்; அந்தப் புதுப் பெண் அதில் சிறிது அள்ளிக் குடித்துக் கொள்ளட்டும்!"

உறக்கத்திலிருந்து எழுந்த மாதிரி இளங் கல்யாணி இதைக் கேட்டு திடுக்கிட்டு அதிர்ச்சியடைந்தாள்.

அந்த அதிர்ச்சியில் ஓங்கிய அடிக்கட்டை, தேங்காய் மட்டையைப் பிடித்துக் கொண்டிருந்த இடது கை சுண்டுவிரலின் மீது விழுந்து விரலை நசுக்கியது. விரல் நைந்து ஏற்பட்ட வேதனையில் அவள் வாய் விட்டு அழ ஆரம்பித்தாள். அதைக் கண்ட, அங்கு கூடியிருந்த பெண்கள் எல்லோருக்கும் கை கொட்டிச் சிரிக்க வேண்டுமென்று தோன்றியது. ஆனால், அந்தப் புரட்சிக்காரன் அப்போதும் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்த

வுடன் அவர்கள் அப்படியே நின்று விட்டார்கள்.

## 2

அவளொரு பாய்ச்சல் பாய்ந்துவந்தாள். அதுவும் அவனைக் கடித்து விழுங்கப் போவது போலிருக்கும் முதலாளியின் முன்பு!

" யாரடா உன்னிடம் சொன்னது இங்கே வந்து வேலை செய்யும்படி?" வெறி கொண்ட ஓநாய் மாதிரி முதலாளி சீறிக் கொண்டு அவன் முன் வந்தார்.

கல்யாணியின் கண்ணிலிருந்து இரண்டு நீர்த்துளிகள் மின்னி விழுந்தது: " கடவுளே, யாருடனும் கேட்காமலா வேலைக்கு வந்தார்!"

"உன்னைத் தானடா கேட்கிறேன் நாய்க்குப் பிறந்தவனே. யார் உன்னை வேலைக்கு அமர்த்தியதென்றுதான்கேட்கிறேன்?" முதலாளி கத்தினார்.

"யாரும் சொல்ல வேண்டியதில்லை; இது என்னுடைய உரிமை!" அந்தக் கத்தலுக்குப் பதிலாக அமைதியோடு அவன் பதில் கொடுத்தான்.

"உன்னுடைய உரிமை?"

"ஆம்! என்னுடைய உரிமைதான்!"

"வெளியேறடா கரைக்கு...!"

".....இவனுடைய தகப்பனு!"

முதலாளியை மதிக்காமல் பேசுவது! —அந்த இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட காதுகளிலும் இது எதிரொலித்தது. தன் காதுகளையே நம்பாமல் இளங்கல்யாணி திகைப்போடு " இன்று இங்கே எமனுடைய தர்பார் நடக்கும்!" என நினைத்தாள்.

அவளைப் போலவே மற்றவர்களும் பல சம்பவங்கள் நடக்குமென்று நினைத்தார்கள். ஆனால் அவர்கள் நினைத்ததல்ல அங்கு நடந்தது.

அவனைச் சேற்றில் அமுக்கிக் கொல்ல வேண்டுமென்று இறங்கிய முதலாளி, ஒரு அழுகிய தேங்காய் மட்டையைக் கையிலெடுத்துக் கொண்டு அவன் எதிர்த்து நின்றவுடன் பின்வாங்கினார். உடனே அங்கிருந்து வேகமாகப் புறப்பட ஆரம்பித்தார். "என்னடா! சிறையிலிருந்து வெளியேறும் போது சிறை அதிகாரியிடமிருந்து எனக்கு வாரண்டு கொண்டு வந்தாயோ"

"தேவையானல், நீர் போய் வாங்கிக் கொள்ள வேண்டியது தான்; எனக்கு அது அவசியமில்லை,"

" உதையுங்களடா அவனை!" ஆத்திரமடைந்த முதலாளி, மற்றத் தொழிலாளிகளை உதவிக்கு அழைத்தார்.

"அடியுங்கள்" அவன் பலமாகச் சிரித்தான்.

" அடியுங்கள்"

கடைசியில் முதலாளி தனக்குத் தானே யோசித்து; "அடே உனக்கு நான் பரிசு கொடுக்கிறேனடா!"

" பரிசு மட்டுமல்ல," அவன் உரத்த குரலில் பேசினன். " என்னை வேலைசெய்ய விடாமல் சிறைக்கனுப்பிய நாட்களுக்கும் சேர்த்து கூலி கொடுத்தாக வேண்டும். அதை மறந்துவிடாதீர்கள்!"

முதலாளி அவ்விடத்தைவிட்டுப்போய் சிறிது நேரங்கழித்த பின்னும், அங்கே நிசப்தமாக இருந்தது. அன்று மாலைப் பொழுதுக்குள் அங்கு போலீஸ் லாரிகளைக் காணலாமென்று அவர்கள் நம்பினர்கள்.

திடசித்தத்தின் சின்னமாக அப்போதும் கோபாலன் முழங்கிக் கொண்டிருக்கிறான். "மன உறுதியுள்ள ஒரு தொழிலாளி போதுமடா, முதலாளிகளேயும் அவர்களின் ஏவலாட்களேயும் பணியச் செய்வதற்கு!"

இளங் கல்யாணிக்கும் மற்றும் பலருக்கும் அதன் பொருளென்னவென்றுகூட விளங்கவில்லே. இருந்தாலும், அந்த வார்த்தைகளின் மதிப்பு அவளுடைய மனத்திலும் மற்றவர்களின் உள்ளங்களிலும் ஒரு பலத்த கிளர்ச்சியை உண்டாக்கி விட்டது.

### 3

அவர்களில் பலரின் முகங்களிலும் முன் தினம் நடந்த சம்பவங்களின் உணர்ச்சி பொங்கிக்கொண்டிருந்தது. கோபாலன் வீணுக குழப்பத்தை உண்டாக்குகிறுன் என்று ஒரு பகுதியாட்களும், இல்லே. அவன்தான் ஒரு உணர்ச்சியுள்ள ஆண் மகன் என்று வேறு சிலரும் தங்கள் அபிப்பிராயத்தை வெளியிட்டனர். இம்மாதிரி அங்கு ஆறேழு மாதங்களுக்குப் பின் முதல் முதலாக மனிதர்களின் குரல் எழத் தொடங்கியது.

முன் தினத்தைவிடத் தெளிவாகவும் நம்பிக்கை மிகுந்ததாகவும் இருந்தது அன்று கோபாலனின் பேச்சு. காரிய சாத்தியமான பல திட்டங்களும் அன்றைய பேச்சில் பொதிந்திருந்தன. கடந்த இரு தினங்களாக விலகியிருந்தவர்களில் பலபேர் அன்று அவனே அணுகிவந்தனர். பலருக்கு பல சந்தேகங்களும் அபிப்பிராயங்களும் தோன்றின.

இந்த ஒருகாரியத்தில் எல்லோருக்கும் அபிப்பிராய ஒற்றுமை ஏற்பட்டது: "என்னயிருந்தாலும் நாம் உணர்ச்சியற்று அடங்கியிருப்பதில் பயனில்லே."

அப்போது இன்னெரு சந்தேகம் கிளம்பியது. "அது சரிதான்! தேவையான நேரத்தில் எத்தனேபேர் துணிந்து நிற்பார்கள்?,'

"ஐந்தாறு பேர் செய்வதைப் பார்த்துத்தான் ஆயிரம்பேரும் செய்வார்கள்!" ஒரு பிரகடனம் பொன்ற தொனியில்கோபாலன் பேசினுன்.

கல்யாணி அக்கரையோடு இதைக் கேட்டுக்கொண்டிருந்தாள். அதை எப்படியும் வெளிப்படுத்த வேண்டுமென்ற உணர்ச்சியை அடக்கிக்கொண்டிருந்தாள். அவளே அறியாமலே தன்னுடைய மனம் அவனுடைய அபிப்பிராயங்களுடன் இணேந்து போவதாக அவளுக்குத் தோன்றியது.

ஜனங்கள் அடிக்கடி தெருவை நோக்கிக்கொண்டேயிருந்தனர். எந்த நிமிஷத்திலும் ஒரு கூட்டம் போலீஸ் லாரியுடன் முதலாளி அங்கு வந்து சேருவாரென்று அவர்கள் எதிர்பார்த்தார்கள்.

அன்றைய தினம் வழக்கத்தை விட சற்று முன்னதாகவே வீடு திரும்பவேண்டுமென்று தன் தாய் சொல்லியனுப்பியதை அவள் அடிக்கடி ஞாபகப்படுத்திக்கொண்டாள். அதை நினேக்கும்போதெல்லாம் ஒரு இன்பமான உணர்வு ஏற்பட்டது அவளுக்கு. ஒரு புதிய வாழ்க்கையின் முன்னேடியாக தன்னுடைய புதிய வாழ்க்கைத் துணேவன் அவளேப் "பெண் பார்க்க"

வரும் பொன் மாலையாக இருந் தது அன்று. ஒரு புதிய ஒளியுடன் ஒரு புதிய நபரின் முன் மகிழ்ச்சி பொங்கத் தோன்ற வேண்டிய ஒரு புதிய நன்னாள்!

ஆனால், எதிர்பாராத விதத்தில் ஒரு மாறுபட்ட எண்ணம் தோன்றியது அவளுடைய மனதில். அந்த மகிழ்ச்சியைக் குறித்து நினைக்கும்போது தெளிவற்ற ஒரு மனக்குறை! தன்னைப் போன்றவர்களுக்காகத் தன்னந் தனியாகவாவது நின்று போராடத் தயாராகிக் கொண்டிருக்கும் அந்த உயிரை அங்கு தனியாக விட்டு விட்டுப் போக வேண்டுமென்று நினைக்கும்போது அவளுக்கு ஒரு வேதனையேற்பட்டது.

"என்னவானாலும் சரி, இன்று நான் வழக்கத்திற்கு மாருக சிக்கிரத்தில் வீடு திரும்பப்போவதில்லை." என்று அவள் தீர்மானித்தாள். போலீஸ் லாரி வருமென்று தோன்றுகிறது. இதை எதிர்பார்த்தே வழக்கத்திற்கு மாருகத் தன்னுடைய கூட்டாளிகள் பலர் வீட்டுக்குப் போய்விட்டதை அறிந்தும் அவள் அங்கேயே இருந்து வேலை செய்தாள்.

அன்று, ஏதாவது நடக்கும் என்று எதிர்பார்த்திருந்தாலும், மாலைவரை ஒரு விளைவும் ஏற்படவில்லை. ஆகையால் இதைப் பற்றி எல்லோரும் ஆச்சரியமடைந்தனர்.

அசாதாரணமாக ஏதாவது நடக்குமோ என்ற எண்ணமே இன்றி தலை நிமிர்ந்தும் தெளிவான பேச்சோடும் வீட்டுக்குத் திரும்பும்அந்தப் "புரட்சிவீரனை" தன்னை அறியாமலே சிறிது தூரம் பின் தொடர்ந்து அவள் சென்றாள். வலது கையில் பிடித்திருக்கும் தூக்குப் பாத்திரத்தை ஆட்டிக் கொண்டும் தோழிகளுடன் கல கலவென்று பேசிக் கொண்டும்அவனைத் தொடர்ந்து நடந்துக் கொண்டிருக்கும்போது அவளுடைய மனதில் ஒரு நிறைந்த உணர்ச்சி பொங்கியது.

## 4

திட்டவட்டமான ஒரு முடிவுக்கு வந்த முகபாவத்துடன் முதலாளியும் அவரின் நிழல் போன்று மானேஜரும் அங்கு வந்து சேர்ந்தார்கள்.

அவர்கள், ஒரு புதிய திட்டத்துடன் கோபாலனைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருப்பதைப் பார்த்த கல்யாணியின் மனம் பீதியால் துடித்துக் கொண்டிருந்தது. அதற்குள் தொழிலாளிகளில் சிலர் அவர்களுடன் குசுகுசுவென்று பேசிக்கொண்டுமிருந்தார்கள்; "காலன் இன்று திட்டத்தோடுதான் வந்திருக்கிருன்"

முதலாளி, அங்குவந்து நிற்பதைத் தெரிந்தும் தெரியாத பாவனையிலேயே கோபாலன் வேலைசெய்வதும் வழக்கம்போல் பேசுவதுமாயிருந்தான். கலக்கமின்றி வேலை பார்க்கும் அவனைப் பார்க்கும்போது முதலாளிக்கு ஆத்திரம் அதிகமாகிக் கொண்டிருந்தது. ஆனால், ஒரு குழப்பமான நிலைமை—அவனை எந்த விதத்தில் மடக்குவதென்ற ஆலோசனையோடு கூடிய ஒரு பயம்!

அந்தப் பகைமையுணர்ச்சியெல்லாம் சேர்த்து கோபாலனுடன் பேசிக்கொண்டிருந்த ஒரு தொழிலாளி மீது முதலாளி சீறி விழுந்தார். "என்னடா உன்னுடைய அரசாங்கம் நடந்து கொண்டிருப்பதாக எண்ணமோடா..............?"

இரண்டு தினங்களுக்கு முன்பு வரையும், இதைப்போல எத்தனையோ தடவை சிறிலக் கேட்டும் ஒரு வார்த்தை பதில் பேசாமல் சகித்துக்கொண்ட அந்த தொழிலாளி அன்றுமுதல் முதலாக மனம் புழுங்கினுன். குறிப்பாக, கோபாலனைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு இந்த வசை மொழிகளைக் கேட்பதென்று நினைத்தவுடன் பொருமையிழந்துஅவனும் ஏதோ பதில் பேசினுன். ஆனுல் முதளாளிக்கு வேறு விதமாக மனதில் பட்டது.

"இன்று ஆள்பவர்களின் தலை கழுத்தில்தானே இருக்கிறது?"

"என்னடா உனக்கு மந்திரியாக வேண்டும் இல்லையாடா!—தேங்காய் நார் உறிப்பவனுக்குப் பிரதம மந்திரியாக வேண்டுமென்று ஆசை!"

"என்ன, நான் சொல்வது சரிதானே?"

இந்த கடைசிக்கேள்வி கோபாலனைக் கேட்பதாயிருந்தாலும், அவன் முகத்தைப் பார்க்க முதலாளிக்குத் தெம்பில்லை. அந்த ஆத்திரத்தையும் சேர்த்து பக்கத்திலிருந்த தொழிலாளியின்மேல் சீறினுர்.

"ஆகட்டும், நீ இனி அரசாளப்போ. ஆளப் போகிறவன் இனி இங்கே வேலை செய்ய வேண்டாம்."

இம்மாதிரி நினைத்துக் கூட பார்க்காமலிருந்த அந்த தொழிலாளி இந்த தீர்ப்பைக் கேட்டு திடுக்கிட்டுப் போனுன்

"போடா வெளியில்" முதலாளி முன்னிலும் கோபமாக அதட்டினுர். "நீ இனி மேல் இங்கு வேலைக்கு வேண்டாம்!"

"வேலைக்கு வேண்டாம்? இதை யார் தீர்மானித்தது?" திடீரென்று கரையேறி வந்த கோபாலன் இந்தக் கேள்வியை எறிந்தான். "அவன் இங்கே தான் வேலை செய்வான்!"

"என்னடா......... மகனே!" தோல்வி மனப்பான்மையால் ஆத்திரத்தில் அறிவிழந்த முதலாளி திரும்பி நின்று "......... மகனே, அதைத் தீர்மானிக்க நீ யாரடா?"

"அப்படியானுல், நீர் அவனை வேலையைவிட்டு நீக்கிப்பாரும்?"

"என்னடா செய்வாய் வேலையிலிருந்து நீக்கினுல்?" கையை ஓங்கிக் கொண்டு முதலாளி அந்தத் தொழிலாளியை நெருங்கினுர்.

"போடா வெளியில்!"

முன்னிலும் அதிகமாக முழங்கினுன் கோபாலன்.

"நில்லடா அங்கேயே உறுதியாய்!"

அந்தத் தொழிலாளி அங்கேயே உறுதியாய் நின்றுன்.

இடுப்பொடிந்த மலைப் பாம்பைப் போல் முதலாளி மலைத்து நின்றுர். எவ்வளவுதான் ஆலோசனை செய்தும் அந்த இடத்தில் என்ன செய்வதென்று அவருக்கு ஒன்றும் விளங்கவில்லை. "என்னுடைய......... என்னுடைய தொழிலாளியை வேலையை விட்டு நீக்க...உன்னுடைய...உன்...னு...டைய. சர்டிபிக்கட்டு..."

அவர் அந்த வார்த்தையை முடிப்பதற்குள், ஓராயிரம் கேள்விகளை எழுப்பக் கூடிய விதத்தில் கோபாலன் கேட்டான் "உன்னுடைய தொழிலாளி?"

அந்த உணர்ச்சி மிக்க கேள்வியின் அதிர்ச்சியைத் தாங்காமல்முதலாளி திணறிப்போனுர். உடனே, ஒரு புதிய திகைப்பும் அவமான உணர்ச்சியும் ஏற்பட்டு விடுவிடென்று அவர் நடையைக் கட்டினுர்.

RM. MUTHIAH
ARTIST
KOTTAIYUR

"என்ன கோபாலன்னு இதெல்லாமென்ன !"

ஆச்சரியமும் அனுதாபமும் அணை கடந்து, ஜீரணமாகாத உணவு வாந்தியெடுப்பது போல, தன்னையறியாமலே கல்யாணி இந்த வார்த்தைகளைக் கொட்டிவிட்டாள். ஆனால், அந்தக் குழப்பத்தில் அது யார் காதிலும் விழவில்லை.

5

மேலும் மேலும் தொழிலாளிகள் கோபாலன் பக்கம் சேர்ந்தார்களென்றாலும், பெரும்பாலும் அப்போதும் அவனுக்கெதிராயிருந்தனர். தொழிலாளிகள் இரு பகுதியாகப் பிரிந்து மூச்சுவிடாமல் தர்க்கமும்வாதப் பிரதிவாதங்களும் நடத்திக் கொண்டுதானிருந்தனர். பெரும் பகுதி எதிராயிருந்தாலும், கோபாலன் கட்சிக்குத்தான் செல்வாக்கு மிகுந்திருந்தது.

பெண்களிடையில்தான் இந்த வேறுபட்ட அபிப்பிராயங்கள் அதிகமிருந்தது. ஆதரவாளரும் எதிர்ப்பாளரும் ஒருவருக்கொருவர் ஒரு போரே நடத்தி வந்தனர்.

கல்யாணிக்கு இதைப் பற்றி சில தெளிவான அபிப்பிராயங்களிருந்ததென்றாலும், பகிரங்கமாகக்கோபாலன்கட்சிக்குச்சாதகமாக வாதாட அவள் துணியவில்லை. சங்கங்களையும் போராட்டங்களையும் பற்றி ஒன்றுமறியாத தன்னுடைய அபிப்பிராயத்திற்கு அவ்விடத்தில்என்ன மதிப்பு இருக்குமோவென்று சந்தேகித்தாள்.

இம்மாதிரி, அவள் திக்கி முக்கி வரும் தன்னுடைய சொந்த அபிப்பிராயங்களை மிகவும் கஷ்டப்பட்டு விழுங்கிக் கொண்டிருக்கும் போதுதான், கோபாலன் வந்த முதல் நாளே தன்னையும் அவனையும் சேர்த்து ஒரு கட்டுக் கதை சிருஷ்டிக்க முயற்சித்த மீனாக்ஷி கீழ்க்கண்டவாறு கூறினாள்: "இந்த பண்டாரப்பயல் உள்ள வேலையையும் இல்லாமல் செய்து விடுவானென்றுதான் தோன்றுகிறது !"

இதைக் கேட்ட கல்யாணி தனக்குத் தானே தன்னையறியாமல் பேசி விட்டாள். "என்னவானாலும் உங்களுக்கு வேலையிருக்கும் !"

பெண்களில் அனேகம் பேர் ஒரு சமயம் கண்ணைச் சிமிட்டினர். அதைக் கண்ட மீனாக்ஷி கல்யாணியின் மீது வானம் போல் பாய்ந்தாள். "என்னடி சொன்னாய் தேவடியாச் சிறுக்கி ?"

தான் எவ்வளவு அடக்கமாயிருந்தும் தப்பு நடந்து விட்டதென்ற உணர்வோடு அந்த இளமங்கை மௌனமாயிருந்தாள். ஆனால் மீனாக்ஷியா விடுபவள் ; "போடி, போய் அவனை உன்னுடைய சொந்தக்காரனாக்கிக் கொள் !"

"சீ ! வாயாடி!" துப்பாக்கியிலிருந்து கிளம்பிய குண்டுமாதிரி இளங் கல்யாணி இதைக்கேட்டு ஒரு துள்ளு துள்ளினாள். "இருந்தாலும் உன்னைப் போல கருங்காலித் தலைவர்களின் காலைப் பிடிப்பவள் நானல்லடி !"

பெண்களெல்லோரும் கூட்டத்தோடு சிரித்தார்கள்.

"என்னடி சொன்னாய்?" குண்டடிபட்ட பெண் பன்றி மாதிரி, மீனாக்ஷி கல்யாணிக்கு நேராகத் தன்னுடைய தேங்காய் நார் அடிக்கும் கம்பை வீசினாள்.

கல்யாணியும் எதிர்த்து வீசினாள்.

"அவனை நானென்னவாவது சொன்னால் உனக்கேன் இவ்வளவு கோபம்?"

"முதலாளிக்கு ஏதாவது ஏற்பட்டால் உனக்கேனடி இவ்வளவு கவலை?"

இம்மாதிரி அந்த பெட்டைக் கோழிகளிரண்டும் அந்த இடத்தை ஓர் போர்க்களமாக்கிவிட்டன. கையும், நகமும், பல்லும் மட்டுமல்லாமல் கையில் கிடைத்ததெல்லாவற்றையும் உபயோகித்தார்கள். அடிபட்டுத் தளர்ந்து மீனாக்ஷி சவுரிக் கட்டின்மீது விழுந்தாள். இருந்தாலும் கல்யாணி விடுவதாயில்லை. எதிரியின் மார்பைப்பிடித்து ஒரு இழுப்பு இழுத்துக் கொண்டு அந்த இளம் பெண் பின் வருமாறு கூறினாள். "அடி தேவடியாளே, உன் நன்மைக்காகவும் சேர்த்துத்தானடி அந்த மனிதன் அடிபட்டு சாகத் துணிந்தது."

"அய்யோ என்னைக் கொல்கிறாளே!" என்று வயிற்றில் ஒரடி வாங்கிய மீனாக்ஷி கூக்குரலிட்டாள்.

"உன்னைக் கொன்றால் போதாதடி! உன்னைச் சித்ரவதை செய்து துப்பாக்கியால் சுட்டு வீழ்த்த வேண்டும்!" எதிரியின் மார்பிலும் வயிற்றிலும் கடுந்தாக்குத் தாக்கிக் கொண்டே இளங் கல்யாணி முழங்கினாள். "கருங்காலி!"

அப்போது கோபாலன் ஓடிவந்தான் அவர்களை விலக்கிவிட. "என்ன கரிச் சட்டியிலேயே மீன் பிடிக்க ஆரம்பித்து விட்டீர்களா!"

கோபாலன் தன்னுடைய முழு பலத்தையும் உபயோகித்தும் அவளை விலக்கிவிடுவது கஷ்டமாயிருந்தது. மீனாக்ஷியின் பாஷையில் முன்னமே சிவப்பு மாம்பழம் போலிருந்த அந்த முகத்தில் இந்தப் போராட்டத்தால் ரத்தங் கசிந்து கொண்டிருந்தது. கண்ணில் தீப்பொறி பறக்கவும் நெஞ்சம் கொதிக்கும் கோபாவேசத்தில் கல்யாணி துடித்தாள் "கருங்காலி, கருங்காலி! இப்போதவளைக் கொல்ல வேண்டும்!"

## 6

சம்பளம் போடக்கூடிய நாளாயிருந்தது அன்று. அன்று-முதலாளி தன்னுடைய முழு அதிகாரத்தையும் காட்டக் கூடிய நாள்.

எண்ணற்ற பற்றுக்குறை பட்ஜெட்டுகளோடு அந்த ஆயிரத்திற்கதிகமான தொழிலாளிகளும் பொறுமையிழந்து காத்திருக்கிறார்கள். பொழுதடையும் வரையும் முதலாளி வந்து சேரவேயில்லை.

கடைசியில், மையிருட்டான பின் மனமில்லா மனதோடு மானேஜர் ஒவ்வொன்றாக பேரைக் கூப்பிட்டார். அவரைவிட அதிகமானசலிப்போடு முதலாளி அவரவர்களுக்கான சம்பளத்தை எடுத்து மேஜையின் மீது வீசினார்.

ஏமாந்த பார்வையோடு, பலரும் சம்பளப் பணத்தை வாங்கிப் பார்த்தனர். தங்களுடைய கூலியில் காரணமில்லாது குறைவு ஏற்பட்டிருப்பதைப் பலரும் தெரிந்துகொண்டார்கள். சிலருக்கு "அபராதம்" வேறுசிலருக்கு "பிடித்து வைப்பு" இன்னும் சிலருக்கு "கணக்கில்லாமல் போனது" இம்மாதிரி அநேகமாக எல்லோருக்கும் அதுவரை கிடைத்துவந்த பட்டினிக் கூலியும் பாதியாகக் குறைந்திருந்தது.

ஆண்களின் வரிசையில் ஆகக்கடைசியில் நின்றது கோபாலன் தான். மற்றவர்கலெல்லாம் போன பின்னும்

அவன் பெயரைக் கூப்பிட வில்லை. என்னவரானாலும் பெண் களின் பெயர் கூப்பிட ஆரம்பிப் பதற்கு முன் தன்னுடைய பெயரை ஞாபகப்படுத்தி வைக்க லாமென்று அவனுக்குத் தோன் றியது. "என்னுடைய கூலி"?

"உன்னுடைய கூலி! உம்! அதைப் பிறகு கொடுத்தனுப்ப லாம்!"

"இது எவ்வளவு நாளாக இம் மாதிரிப் பழக்கம்?"

"என்னடா உனக்குக் கூலி?" முதலாளி தாவி எழுந்தார்.

அதற்குச் சரியான பதிலுடன் கோபாலன் முன்னேறி எதிர்த்து வந்தபோது, பெண் கள் கூட்டத்திலிருந்து யாரோ அழுகை கலந்த குரலில் பேசி யது காதில் விழுந்தது. "ஆனால் இன்று நமக்கு யாருக்கும் கூலி கிடைக்கப்போவதில்லை.'

கூலியைப்பெற்றுக் கொண்டு வீடு திரும்பவேண்டுமென்று ஏங்கிக்கொண்டு அந்த மையிருட் டில் நின்று தத்தளித்துக் கொண்டிருக்கும் அந்த முந்நூறு பெண்களின் நிலையைக் கொஞ் சம் சிந்தித்துப் பார்த்த கோபா லன், உடனே தன்னுடைய ஆத் திரத்தை அடக்கிகொண்டு சாந்தமடைந்து வேகமாகத்திரும் பிப் போய் "சரி நீங்கள் முதலில் கூலி வாங்கிக் கொள்ளுங்கள்."

அன்றுவரை அவனை எதிர்த்து வந்த பெண்களுக்குக் கூட அவன்மீது ஒரு அளவற்ற அபிமானம் ஏற்பட்டது.

முதலாளியின் கள்ளக்கணக் கின் மூலம் கூலிக்குறைவுக்கு அதிகமாக ஆளாகியது பெண் கள்தான். கூலியைப் பெற்றுக் கொண்டு திரும்பிவரும்போது அவர்கள் விக்கிவிக்கி அழவும் கண்ணீர் வடிக்கவும் செய்தார் கள்.

கண்ணீரும் கம்பலையுமாக கூலியைப் பெற்றுக் கொண்டு வீட்டுக்குத் திரும்பும்போது, தங்களுடைய மெய்காப்பாள னைப் போல அங்கு காத்து நிற் கும் கோபாலனை ஒருபார்வை திரும்பிப் பார்க்காமலிருக்க பெரும்பாலானவர்களால் இயல வில்லை.

கல்யாணி ஆரம்பமுதலே அவனையே தொடர்ச்சியாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். கூலிவாங்கிக்கொண்டு திரும்பி வரும்போது அவளுடைய அந் தப்பார்வையை மாற்ற அவ ளால் இயலவில்லை. ஒருவார காலம் தொடர்ச்சியாக வேலை செய்தும் அரைக்காசு கூட கூலி கிடைக்காமல் ஒரு போராட்டத் திற்குத் தயாராகவேண்டிய நிலை யிலுள்ள கோபாலனின் அந்த ஒண்டியான நிலைகண்டு உண் மையில் இளங்கல்யாணியின் மனம் வெதும்பியது. தன்னை மறந்து ஒரு உணர்ச்சியோடு, மற்ற எல்லாவற்றையும் மறந்து, அவள் அவனெதிரில் போய் நின்றுகொண்டு, "கோபா லண்ணு, உனக்கு எவ்வளவு பணம் கடன் வேண்டும்?"

இதைக்கேட்ட கோபாலன் சிரித்தான்—ஒருசவால் விட்டது போன்ற சிரிப்பு! "நான் செய்த வேலைக்குக் கூலி கிடைக்கும் போது எனக்கேனம்மா கடன்?"

நிறைந்த கண்களோடும் கை நிறைய சில்லறைக் காசுக ளோடும் நிமிர்ந்து நின்றுகொண் டிருந்தாளந்தப் பெண்மணி. கோபாலன் தன்னுடைய வெகு ளித்தனத்தைக் கண்டு விட் டானோ என்றமனத்தாங்கலோடு தலை குனிந்து நின்றாள்.

உடனே முதலாளியின் முன் பாய்ந்து சென்று, ஒரு மணி முழக்கம் போன்ற தொனியில்

கேள்வியைப் போட்டான் கோபாலன்.

"என்னுடைய கூலி?"

"உன்னுடைய கூலி? என்ன கூலி?"

"நான் வேலை செய்த கூலி!"

"ஓ, அதை ஸ்டேஷனுக்கு அனுப்பிவிட்டோம்!" என்று மானேஜர் சொன்னார்.

கோபாலனின் உடல் சிலிர்த்தது. மானேஜரின் சட்டைக் காலரைப் பிடித்து ஒரு குலுக்கு குலுக்கி விட்டு பல்லைக் கடித்தான். "ஸ்டேஷனுக்கு அனுப்பியாயிற்று இல்லையா?"

கழுத்தில் சுருக்கிட்டுக் கொண்டு சாகும் ஒரு சிறிய உணர்ச்சியை அடைந்தார் மானேஜர்.

அப்போது முதலாளி டெலிபோனை எடுத்து, "ஸ்டேஷன், ஸ்டேஷன்............" என்று கூவினார்.

"கூலி கேட்கும் போது ஸ்டேஷன்....." அந்த டெலிபோன் ரீசிவரோடு சேர்த்து மானேஜரைப் பிடித்துக் கொண்டு கோபாலன் பலமாக அதட்டினான். "என்னுடைய கூலியைக் கொடுக்கிறீர்களா இல்லையா?"

உடனே, முதலாளி ஒரு ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து அந்த மேஜை மீது வைத்தார்.

## 7

அன்று சவுரி அடிக்கப் புறப்படும் போது கல்யாணியின் மனதில் ஒரு தெளிவான அதிர்ச்சியேற்பட்டது. முதல் நாள் இரவு நடந்த தன்னுடைய திருமண நிச்சயத்தைப் பற்றி நினைக்கும் போது அவள் மேலும் மேலும் நிராசை யடைந்து வந்தாள். யாரைக் கண்டாலும் ஒரு வெறுப்பு.

"கண்ணீரல்ல, என்னைப்போலுள்ள ஒருவன் தன் பெண்ணிடம் எதிர் பார்ப்பது ரத்தம் தான்." ஆதியில் அவன் யாரிடமோ கேலியாகச் சொன்ன இந்த வார்த்தையை மேலும் மேலும் உருப்போட்ட அவள் விரும்பினாள். அதை நினைக்க நினைக்க கடந்த ஒரு வார காலமாக அவளுக்குத் தோன்றிய அந்தக் குறையின் எல்லையும் ஆழமும் அதிகமாகிக் கொண்டேயிருந்தது.

பல தடவையும் அவள் கோபாலனையும் தன்னுடைய எதிர்கால கணவனையும் பரஸ்பரம் ஒத்துப் பார்க்க முயன்றாள். அப்படிப் பார்க்கும் போது, தன்னுடைய கணவனாக முடிவு செய்திருந்த அந்த நபரிடத்தில் ஏதோ ஒரு பெரிய குறை அவளுக்குத் தோன்றியது. கண்ணீருக்குப் பதில் செந்நீர் கேட்கும் ஒரு தீரனின் அன்பே அவளுக்குத் தேவையாயிருந்தது!

அன்று வழக்கத்தை விட சீக்கிரமாகவே அவள் வீட்டிலிருந்து கிளம்பினாள். அவளது ஆசை அன்று தனிமையில் நடக்க வேண்டும் போலிருந்தது. மத்தியானத்திற்கு வேண்டிய கஞ்சியை எடுக்க மறந்து விட்டாள்.

சீக்கிரமாகவே புறப்பட்ட போதிலும், மிகவும் தாமதமாகவே அவள் அன்று வேலை செய்யுமிடத்தை அடைந்தாள் அப்போது அங்கு ஒரு பூகம்பத்தின் நிலை ஏற்பட்டிருந்தது.

திடுக்கிடத் தக்க பேச்சுக்கள் தெருவெல்லாம் எதிரொலித்தன. முதல் நாள் இரவு முதலாளியின் பங்களாவில் சாராய பாட்டில்கள் உருண்டனவென்றும், பொறித்த கோழிகள் போலீஸாரின் வயிற்றில் மாயமாய் மறைந்தனவென்றும், லஞ்ச தேவதை நாட்டியமாடி ஐந்தாம்

படையை அணைத்துக் கொண்டதுஎன்றும் பேச்சுப்பரவிற்று. எல்லோரும் ஒரு விஷயத்தில் முடிவான ஒரு தீர்மானத்திற்கு வந்திருந்தனர். "இன்று இங்கு ஏதாவதொரு விபரீதம் விளையப் போகிறது!"

திட உறுதியோடு கலக்கமின்றி அப்போதும் பேசிக் கொண்டிருந்த கோபாலனை, இளங் கல்யாணி அன்று முதல் முதலாக கண் நிறைய ஒரு பார்வை பார்த்தாள். ஒரு புதிய உலகத்தின் பிரதிநிதியைப் போலுள்ள அவனுடைய அந்த முகபிம்பத்தை எவ்வளவு தான் பார்த்தாலும் அவள் மனதில் திருப்தி ஏற்பட்டதாயில்லை. அவனுடைய இந்த வார்த்தையும் அவள் மனதில் தோன்றிக் கொண்டேயிருந்தது. "இன்று ரத்தம் சிந்துபவனுடையது தான் நாளைய உலகம்!"

ஜனங்கள் அடிக்கடி தெருவைத் திரும்பிப் பார்த்துக் கொண்டேயிருந்தனர் போலீஸ் லாரியின் இரைச்சல் கேட்கிறதா என்று! மற்ற தொழிலாளிகள் தெருவைப் பார்க்கும் போது அந்தப் பெண்மணி கோபாலனை கூர்ந்து கவனித்தாள். அந்த இரைச்சலைக் கேட்கும் போது அவனுடைய கண்கள் எப்படி ஒளி வீசுமென்பதைக் காண ஆவலாயிருந்தாள்.

அம்மாதிரி, பார்த்துக் கொண்டிருக்கும்போதே அந்தப் படை திரண்டுவந்தது—ஐம்பது அறுபது போலீஸ்களும் முதலாளியும் வந்து சேர்ந்தனர்!

புருக் கூட்டம் கலைந்தது போல பெண்கள் கலைந்துபோயினர். கோபாலனைத்தவிர மற்ற எல்லோரும் வேலையை நிறுத்தியதைக் கல்யாணி பார்த்தாள். "அந்த ஏழையை ஒண்டியாக விட்டு விட்டு மற்ற எல்லோரும் ஓடிப் போவார்களே. அட கடவுளே!"

கண்ணில் இருதயமும் இருதயத்தில் கண்ணுமாகக் கல்யாணி கூர்ந்து கவனித்தாள்; போலீஸார் அவனையே தேடிப் பிடித்து நெருங்குகிறார்கள்! அவன் இதைக் கவனித்ததாகவே காட்டிக் கொள்ளாமல் தேங்காய் மட்டைகளை எடுத்துக் குவித்தான்.

போலீஸார் கரையிலும் அவன் வாய்காலிலும் இருந்தனர்!

அவன் வாக்கர்லிலும் போலீஸார் கரையிலும்!

அவனுக்கு ஐந்தாவது கஜ தூரத்தில் அவர்கள் நெருங்கி நின்றார்கள்; "........மகனே, வாடா இங்கே!"

தேங்காய் மட்டைகளை எடுத்துக்கொண்டே அவன் "எதற்காக வரவேண்டும்? என்றான்!

"எதற்காக வரவேண்டுமா ?"

அவர்கள் அவனை நெருங்கினார்கள். கல்யாணியின் நெஞ்சு பிளந்தமாதிரி உணர்ச்சியால் கூக்குரலிட்டாள். "ஐயோ !"

"அடே கழுவேறி மகனே! உன்னைத்தாண்டா சொல்வது. கரையேறடா !" "போலீஸாரின் தலைவன் தன்னுடைய வலது கையை இடது இடுப்பின் பக்கம் நீட்டினான்.

"நான்தான் கேட்கிறேன், எதற்காகவென்று !" அருகில் கிடந்த ஒரு முழக் கம்பை நன்றாகப் பிடித்துக்கொண்டு திரும்பி நின்றான்.

கல்யாணியின் உடல் நடுங்கியது. அவள் வியர்த்து விதிர் விதிர்த்துப் போனாள்.

"எதற்காகவா! வாடா இங்கே. உன்னைக் கொஞ்சம் நான் பார்க்கவேண்டுமடா !

சக்தி

"இப்போது நேரமில்லை. பிறகு சாவகாசமாகப் பார்க்கலாம்........"

"என்னடா சாவகாசம்!" அந்தத் தலைவன் தன்னுடைய இடது இடுப்பிலிருந்து தன் ஆயுதத்தை எடுத்தான்.

"ஆமாம் இப்போ சாவகாசமில்லைதான். இங்கு வேலை இருக்கிறது." அவன் மீண்டும் தேங்காய் மட்டையை எடுக்க ஆரம்பித்தான்

"உனக்கு வேலை இருக்கிறதோடா!"

"ஆமாம்; அது என்னுடைய உரிமை—வேலை செய்வதும் செய்யாமலிருப்பதும் என்னுடைய உரிமை!"

"என்னடா!" அந்த அற்புதமான தீரத்தின்முன் திகைத்துப் போன அந்த தலைவன் ஆத்திரமுற்றான்: "கழுவேறி, என் கையிலிருப்பது என்னவென்று தெரிகிறதா?........"

"இருக்கட்டுமே, ஆண்களுக்குத் தேவையானது தான் அது." தெளிவான கேலிப் பேச்சை எடுத்து வீசினான்.

"ஐயோ! இதென்ன இப்படிப் பேசுகிறீர்கள்" என்று வாய்விட்டு கதறத் துணிந்தாள் கல்யாணி.

கையிலிருக்கும் ஆயுதம் நடு நடுங்க அந்தத்தலைவன் பல்லைக் கடித்தான். கல்யாணிக்கு அதை ஒருபார்வை பார்க்கவே முடிந்தது. "கடவுளே அது கொஞ்சம் அசைந்தால் என்னவாகும்........?"

இன்னிலைமையிலும் அவன் தன்னுடைய முழக் கம்புடன் முன்னேறினான்! பதை பதைத்த நெஞ்சோடு நிற்கும் கல்யாணியின் காதில் விழுந்தது:

"சாவையும் எதிர்பார்த்தே இருக்கிறேனென்று தெரிந்து கொள்!"

"பொறுங்கள்!" உணர்ச்சி பீறிட்டுக் கூவினாள் கல்யாணி. ஆனால் சப்தம் வெளிக்கிளம்பவில்லை!

ஒரே நிமிஷம்!

"விலகுங்களடா! நான் அவனைத் தொலைத்துவிடுகிறேன்!" என்று தலைவன் அட்டகாசம் செய்தான்.

திடீரென்று கல்யாணி ஒரு துள்ளு துள்ளினாள். விழித்த கண்களும் திறந்த மார்புமாக அந்தத் தலைவன் முன் நின்றாள். துடிக்கும் நெஞ்சுகளும் பொங்கும் ரத்தமுமாக அவள் பொரிந்து தள்ளினாள். "இந்தா தொலைத்துவிடு! முதலில் எங்களை! பிறகு அவரை! உம் ஆகட்டும்!"

இடையறப் பறந்து விம்மிப் புடைத்து நிற்கும் மார்பகங்கள்!

கண்ணிலொரு குளவி கொட்டியதுபோல் அந்தத்தலைவன் திடுக்கிட்டான் "என்ன!"

"என்ன?"

"என்ன!"

அந்த அளவு நேரமும், மறைவும் போதுமானதாயிருந்தது கோபாலனுக்கு அங்கு ஒரு புதியசரித்திரத்தை உண்டாக்க. அவன் அந்தப் பளபளக்கும் துப்பாக்கியை வெடுக்கெனப் பிடுங்கிக்கொண்டான்; இதைக் கண்ட தொழிலாளிகள் ஒன்று திரண்டு போலீஸைச் சூழ்ந்து கொண்டார்கள்!



திரைப்பட விமர்சனம்

# பணம் படுத்தும் பாடு

வெங்கடேசன்

'நிரபராதி'க்குப் பின் பட உலகப் பாட்டன் திரு எச்.எம். ரெட்டி வெளியிட்டிருக்கும் படங்கள் ஒன்றும் அவர் புகழை உயர்த்தவில்லை. 'வஞ்சம்' என்ற மூன்றாந்தரமான மட்டப் படத்தைத் தந்த அதே ரோஹிணி பிக்சர்ஸார் இப்போது 'பணம் படுத்தும் பாடு' என்ற மோசமான படத்தை வெளியிட்டு நம்மைப் படாதபாடு படுத்தி வைக்கிறார்கள். எச்.எம். ரெட்டி அவர்களின் டைரெக்ஷனில் அவை உருவாகவில்லை என்பதை நினைக்கும்போது நமக்கு ஓரளவு ஆறுதல் பிறக்கிறது. அதே சமயம் இது போன்ற குறைகள் மிக்க, தரம் குறைந்த படங்களை அவர் தயாரிப்பது நமக்கு ஒரு சிறிதும் மகிழ்ச்சி ஊட்டவில்லை.

மாட்கோல்கர் அவர்கள் மராத்திமொழியில் எப்படிக் கதையெழுதினாரோ, அதை மராத்திப் பட உலகம் எவ்வாறு திரைஉரு கொடுத்ததோ நமக்குத் தெரியாது. ஒய். ஆர். சுவாமியும். சதாசிவப் பிரம்மமும் சேர்ந்து வடிவம் தந்திருக்கும் 'பணம் படுத்தும் பாடு' அவர்களின் திறமையைப் பேசவில்லை. எவ்தளவு தூரம் அறிவை அப்புறப் படுத்தி கதையை வேடிக்கைக் கதையாக நோக்கினாலும் அநேக காட்சிகள் சலிப்பைத் தந்து நம் பொறுமையைச் சோதனை செய்யுமளவுக்கு மிகைப்படுத்திக் காட்டப்பட்டுள்ளன. நகைச்சுவைக்காக இல்லாமைக் குறையையும், கதாநாயகனின் அசட்டுத்தனத்தையும் எவ்வளவுக்கு விரிக்கலாம் என்ற அளவு கோலைத், தழுவியெழுதிய ஆசிரியர்களைத்தான் கேட்கவேண்டும். புத்திசாலி நண்பனைச் சித்தரிக்கப்பட்ட ராம்நாத் (தங்கவேலு) திடீரென்று அசடாகிறார்; அசடாக முன் பாதியில் காட்டப்படும் சேகர் (ராமாராவ்) திடீரென்று புத்திசாலியாகிறார். கலைப் பைத்தியங்களான கவிஞனையும், ஓவியனையும் கொண்டு கதாசிரியர் சமூகத்தைக் குறை கூறுவதாக இருந்தால் அதை இன்னும் புத்திசாலித்தமாக செய்யலாம். 'மிஸ் மாலினி' போல 'ஸீரியஸ் ஸெடையர் (Satire)' 'கல்யாணம் பண்ணிப் பார்' போன்ற 'லைட் ஸெடையர்' ஆகிய இருவகையிலும் இப்படம் சேரவில்லை. சரோஜா (ஜானகி) வின் விநோதச் சித்தரிப்பும், ராவ்சாகிப்பின் ''நாய்ப் பைத்திய''க் காட்சிகளும் ஒரு வேளை வேடிக்கையாகப் பட்டு சிரிப்பு மூளலாம். ஆனால் அதுவும் மூன்றாந்தர ஹாஸ்யமே.

சிரிப்பதற்கென்று படத்தில் நிறையக் காட்சிகள் உள்ளன. ஆனால் அறிவைக் குறுக்கில் நடமாடவிட்டால் ஹாஸ்யம் தள்ளுபடியாகிவிடும். வசனம் ஹாஸ்யப்படத்துக்குக்கூட ஓரளவுசுமா

ராகவும், தமிழ்நடை மிகத் தாழ்ந்துபோகாமலும் இருக்கவேண்டும்: இதில் வரும் வசனநடை நம்மை அதிசயத்தில் ஆழ்த்துமளவுக்குக் கீழாக உள்ளது. பாடல் வரிகள் ஒன்றுவது பாங்காக அமைக்கப்படவில்லை. மொழியின் தரம் எவ்வளவு தாழக்கூடும் என்றறிய இப்படத்தில் வரும் சில வரிகளைச் சொன்னால்போதும்."காதலன்.' என்று தொடங்கும ஒரே ஒரு பாட்டு இனிமையாகவுள்ளது. "பாய்ஜூ பவ்ரா" படமெட்டு ஒன்று. மூல இசை அமைப்பாளரான நௌஷாத் அலியின் திறமையைப் பேசுகிறது. நடன ஆசிரியர் அமைத்திருக்கும் நடனமும் (ராவ்சாகிப் முன்னிலையில்ஆடப்படுவது) அதற்குள்ள பின்னணி இசையும் நம் காதையும், கண்ணையும் பதம் பார்க்கின்றன.

தங்கவேலு சுமாராக நடிக்கிறார். அவர் பாத்திரங்கூட அங்கங்கு மிகைப்படுத்தப்பட்டுள்ளது. ராமராவின் பாகம் நன்றாகச்சிருஷ்டிக்கப்படவில்லை. அவர் அசடாக நமக்குப் படாதிருப்பது அவர் குற்றம் அல்ல. அந்தப் பாத்திரத்தை ஒரு உண்மை அசடனுக்கே கொடுத்திருக்க வேண்டும். 'சவுகார்' என்ற தெலுங்குப் படத்தில் உன்னதமாக நடித்த ஜானகியை நன்கு உபயோகப்படுத்திக் கொள்ள கதாசிரியரும், டைரக்டரும் முயலவேண்டும். ஜமுனா நடிப்பதும் பேசுவதும்செயற்கையாக உள்ளது. சாமாவின் பாகம் அவர் நடிப்பதற்கு ஒரு வாய்ப்பையும் அளிக்கவில்லை. மற்றவர்கள் அப்படியப்படியே.

டைரெக்ஷன் திறமையோடிருந்தால்தான் வேடிக்கைப் படங்கள் நன்றாக உருப்பெறும். டைரெக்டரின் கடின வேலையை எளிதாக்க கதாசிரியர் புத்திசாலித்தனமும், கதைக்கோவை அறுபடாததுமான ஒரு அழகான ஸீனரியோ, திரைக்கதை இவற்றை அமைத்துத் தரவேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக அசட்டுக் கதாபாத்திரங்களுக்குப் பொருந்தி இணையும் நடிகர்களைத் தேடவேண்டும். டைரெக்டர் அதிகச் சிரமப்பட்டுக் கொள்ளவில்லை என்பது படமுழுதும் தெரிகிறது.

முயற்சி செய்தால் முன்னேறக் கூடிய படக்கலையைச் சிரமமே கொள்ளாது மிகச் சாதாரண உழைப்பால் கீழுக்குக் கொண்டுவந்து விடுவர் ஒரு நல்ல கம்பெனியார் என்ற சோக முடிவை "பணம் படுத்தும் பாடு" அறிவிக்கிறது.

●

## ஆணைக் கல்யாணம் செய்து கொண்டவர்

வக்கீல் : "உங்களுக்கு கல்யாணம் ஆகிவிட்டதா ?"
சாட்சி : "ஆமாங்க. ஒரே ஒரு தடவை"
வக்கீல் : "யாரைக் கல்யாணம் செய்து கொண்டீர்"
சாட்சி : "ஏ...ன். ஒரு பெண்ணைத்தான்"
வக்கீல் ; அது சரி - அது சரி. பின் யாராவது ஆணைக் கல்யாணம் செய்து கொண்டதாகக் கேள்விப்பட்டிருக்கிறீரா ?"

வக்கீலின் இந்தக் கேள்வியைக் கேட்டவுடன் சாட்சி ரொம்ப சாவதானமாக, 'ஆமாங்க - என் சகோதரி ஆண்பிள்ளை ஒருவனைக் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறாளே" என்று சொன்னான்.

—ஐரிஷ் டைஜஸ்ட்

# இவை சக்தி வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| செல்வம் | கு. சந்தானம் | ரூ. 1 | 8 |
| ராஜ்யம் | ,, | 1 | 0 |
| அபேதவாதம் | ராஜாஜி | 1 | 0 |
| அரசியல் விமோசனம் | ,, | 0 | 8 |
| பணம் | எமிலி பேர்ன்ஸ் | 1 | 8 |
| மார்க்ஸிசம் என்றால் என்ன? | ,, | 1 | 0 |
| இந்தியக் குடியரசின் அரசியல் அமைப்பு | ந. வேங்கடராமன் | 3 | 0 |
| பூலோக யாத்திரை | இலின் | 0 | 4 |
| காஷ்மீர் பிரச்னை | எஸ். ராமகிருஷ்ணன் | 0 | 6 |
| அணுவை அறிக | நா. கி. நாகராஜன் | 1 | 8 |
| சூரிய நமஸ்காரம் | திருவேதி | 1 | 0 |
| உலோகங்களும் நாமும் | மு. அருணசலம் | 5 | 0 |
| காய்கறித் தோட்டம் | ,, | 5 | 0 |
| உணவுப் பஞ்சம் | ,, | 1 | 8 |
| திரு ஆனைக்கா உலா | ,, | 2 | 8 |
| திருமலை முருகன் பள்ளு | ,, | 2 | 8 |
| ரகுநாதன் கதைகள் | ரகுநாதன் | 3 | 12 |
| ஆணு பெண்ணு | ,, | 2 | 8 |
| தந்தையின் காதலி | ,, | 1 | 0 |
| லெனின் பிறந்தார் | ஆர். ராமனுதன் | 3 | 8 |
| அறிஞர் மார்க்ஸ் | ,, | 1 | 8 |
| சிங்காரி | மஞ்சேரி ஈச்வரன் | 3 | 0 |
| எரிமலை | வீர சாவர்க்கர் | 5 | 0 |
| ஹிந்து சாம்ராஜ்ய சரித்திரம் | ,, | 3 | 12 |
| முத்ரா ராக்ஷஸம் | விசாகதத்தர் | 1 | 8 |
| கூண்டுக் கிளி | ஹரிந்த்ரநாத் | 1 | 0 |
| புறநானூறும் தமிழரும் | கட்டுரைகள் | 1 | 8 |
| ஐந்தாவது சுதந்திரம் | லக்ஷ்மி கிருஷ்ணமூர்த்தி | 1 | 8 |
| அழகிரிசாமி கதைகள் | அழகிரிசாமி | 3 | 12 |
| மகாகவி பாரதியார் | வ. ரா. | 1 | 8 |
| பாரதியார் சரித்திரம் | செல்லம்மா பாரதி | 2 | 0 |
| டால்ஸ்டாய் கதைகள் I | டால்ஸ்டாய் | 1 | 8 |
| ,, II | ,, | 1 | 8 |

தபால் செலவு தனி

**சக்தி காரியாலயம், சென்னை-14**

# தொகுப்பு நூல்கள்

**இந்த எட்டுப் புத்தகங்களும் ஒரு அரிய பொக்கிஷம் என்றே சொல்லலாம். உலகப்பிரசித்திபெற்ற கவிதை, கட்டுரை, கதை, நாவல் இடம் பெற்றிருக்கின்றன. இந்த நூல்கள் ஒவ்வொருவர் கையிலும் வாசகசாலைகளிலும் இருக்கவேண்டியது அவசியம். கொஞ்சம் பிரதிகளே கைவசம் உள்ளன. மறுபதிப்பு வெளியிடும் உத்தேசம் இல்லை. முந்திக்கொள்வது நல்லது.**

**தர்மரட்சகன்** ரூ. 1 0

பிரெஞ்சுப் பேராசிரியன் ..ஸ்தேவ் பிளாபர் எழுதிய தர்மரட்சகன் என்ற சிறு நாவல், பஞ்சலட்சணம் பற்றி ரகுநாதன் எழுதிய விமர்சனக் கட்டுரை, கம்பன்—ஆராய்ச்சிப் பதிப்பு பற்றிய ச. வையாபுரிப் பிள்ளையின் கட்டுரை, ப. ஸ்ரீனிவாசன் எழுதிய வல்ல நாட்டுக் கள்ளன் என்ற சிறு கதை

**ஜீவப்பிரவாகம்** ரூ. 1 0

ராஜா வந்திருக்கிறார் என்ற அழகிரிசாமியின் சிறுகதை, ரகுநாதனின் ஐந்து கதைகள், ருஷ்யப் பேராசிரியன் அலெக்சாந்தர் குப்ரின் எழுதிய ஜீவப் பிரவாகம் என்ற சிறு நாவல், உலகமடல் பற்றி அழகிரிசாமியின் அறிமுகக் கட்டுரை, ருஷ்யப் பேராசிரியன் துர்கானேவின் இரண்டு கவிகள் என்ற கதை, நா. முத்துசாமியின் கவிதை பற்றிய கவிதை.

**திரிவேணி** ரூ. 1 0

ஐந்து ஏக்கர் நிலம் என்ற ரகுநாதனின் சிறு கதை, அமெரிக்கப் பேராசிரியன் வாஷிங்டன் இர்விங் எழுதிய பேய் மாப்பிள்ளை என்ற சிறு நாவல், சீனத்து மகான் ஜ்வாஸ்ட்ஸேயின் இருபது கதைகள், நாவல் பற்றி மாப்பசான் எழுதிய கட்டுரை, கு. அழகிரிசாமியின் திரிவேணி ஆகிய கதைகள் .

**யாத்திரை** ரூ. 1 0

இத்தாலியப் பேராசிரியனின் சிறு நாவல் பெருந பிள்ளை, கு. அழகிரிசாமியின் சொல்லாத சொல் என்ற நாடகம், ஜி. செல்லையா எழுதிய தர்ம புருஷன் என்ற சிறுகதை, விஜயரங்கம் எழுதிய யாத்திரை என்ற கவிதை

**கம்பன் என் காதலன்** ரூ. 1 0

வளரும் மொழி—உரைநயம் என்பது பற்றி வையாபுரிப் பிள்ளையின் கட்டுரை, தென்னாப்பிரிக்கப் பேராசிரியை ஆலிவ்ஷ்ரீனர் எழுதிய பொழுது புலர்ந்தது என்ற நீண்டகதை, திருச்சிற்றம்பலக் கவிராயர் பாடிய கம்பன் என் காதலன் என்ற கவிதை, பொக்காச்சியோ எழுதிய டெக்கமரான் என்ற நூலில் உள்ள பத்துக் கதைகள், ரகுநாதனின் பிரிவுபசாரம் என்ற சிறு கதை.

**காவியக் காதல்** ரூ. 1 4

இராமலிங்க சுவாமிகள் பற்றி வையாபுரிப் பிள்ளையின் கட்டுரை, பழைய ஏட்டுப் பிரதியிலிருந்து பிரதி செய்யப்பெற்ற ஏசல்பாட்டு, இந்திரஜித்து என்ற ல. சண்முகசுந்தரத்தின் ஆராய்ச்சிக் கட்டுரை, அழகிரிசாமி தொகுத்த ஏழு கதைகள் என்ற பழங்காலக் குட்டிக் கதைகள், லூயிகௌபிரஸ் எழுதிய காவியக் காதல் என்ற சிறுகதை, ரகுநாதன் எழுதிய பஞ்சப்பாட்டு என்ற நாடகம்.

**இரண்டு பெண்கள்** ரூ. 1 4

அழகிரிசாமி எழுதிய இரண்டு பெண்கள் என்ற சிறுகதை, கலியுகப் பெருங்காவியம் பற்றி வையாபுரிப் பிள்ளையின் ஆராய்ச்சிக் கட்டுரை. மகாகவி ஹோமர் பற்றிய ரகுநாதனின் கட்டுரை, மந்திராலோசனை—ஹோமர் கவிதையின் தமிழாக்கம்—இவைகளுடன் கிரேக்கச் சித்திரங்கள்.

**ரோஜாப்பூ** ரூ. 1 0

மாக்ஸிம் கார்கியின் சிவப்பன் என்ற நீண்ட கதையும், அரியநாயக முதலியார் பற்றி வையாபுரிப்பிள்ளையின் கட்டுரையும், நீக்ரோ ஆசிரியை மேபல்டோ டாஸ்வா எழுதிய ஞாபகமறதி என்ற சிறு கதையும், துர்கானேவ் எழுதிய ரோஜாப்பூ என்ற சிறு கதையும், நா. முத்துசாமி எழுதிய இருவரில் ஒருவர் என்ற சிறு கதையும், அழகிரிசாமி எழுதிய பொறுமை என்ற கவிதை, அலெக்சி டால்ஸ்டாய் எழுதிய ஏழு கதைகள்.

**தபால் செலவு ஒவ்வொன்றுக்கும் நாலணா. மொத்தம் எட்டு புத்தகங்களில் நான்கு புத்தகங்களுக்கு முன்பணம் அனுப்புபவர்களுக்கு தபால் செலவு இலவசம்.**

## சக்தி காரியாலயம்

**ராயப்பேட்டை ○ சென்னை-14**